உ

குருபாதம்

ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய

# சொக்கநாத வெண்பா

# சிவபோக சாரம்

(பொழிப்புரையுடன்)



தருமை ஆதீனம்

2018

வெளியீடு எண் : 1039

உ

சிவமயம்

**ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய**

# சொக்கநாத வெண்பா

# சிவபோக சாரம்

(குறிப்புரை, பொழிப்புரையுடன்)

தருமையாதீனம் 26-வது குருமகா சந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

சென்னையில் மார்ச் 8, 9, 10, 11 தேதிகளில் நடைபெறும்

அனைத்துலக சைவசித்தாந்த 5வது மாநாட்டில்

வெளியிடப்பெற்றது.

தருமையாதீனம்

2018

அடக்க விலை ரூ.25.00

முதற்பதிப்பு: ஜூன் 2004 (பிரிதிகள் 2000)

இரண்டாம் பதிப்பு : மே 2013 (பிரதிகள் 2000)

மூன்றாம் பதிப்பு : மார்ச் 2018 (பிரதிகள் 1000)

உரையாசிரியர் : மகாவித்துவான் அருணைவடிவேல் முதலியார்

அச்சிட்டோர்:

**பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ்,**

35/16A, பிள்ளையார் கோயில் மேல வீதி,

கணபதி நகர், மயிலாடுதுறை.

போன் : 220640 செல் : 98430 86460

## தருமை ஆதீனம் இருபத்தாறாவது குருமகா சந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முகவுரை

உனக்குப் பணிசெய்ய உன்றனை எந்நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா - மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்க நாதா. -ஸ்ரீ குருஞானசம்பந்தர்

இறைவன் அருள் திருக்கோயில்களின் வழியும் ஞானிகளின் திருவுரு, திருவாக்கு இவற்றின் வழியும் வெளிப்படும். அவ்வகையில் திருக்கயிலை நாதரின் அருள் ஒளி, தைலதாரையாகப் பதிக்கப்பெற்று மண்ணில் இன்றும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அற்புத பீடமே தருமையாதீனமாகும். இவ்வாதீனத்தைத் தோற்று வித்தருளிய ஸ்ரீகுருஞானசம்பந்தர், ஆலவாய்ச் சொக்கரின் அருளைப் பெற்றதோடு, அப்பெருமான் உணர்த்த, கமலை ஞானப்பிரகாசராம் குருவையும் அடைந்து உய்ந்த அனுபூதிமான் ஆவார்.

இவரின் அருள் வரலாற்றில் இரண்டு தனித்தன்மைகள் புலப்படுகின்றன. ஒன்று : திருக்கயிலாய பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசராகிய குருநாதரே, ‘நீர் குருநாதராம் தகுதி பெற்றீர் ! நாடிவரும் பக்குவ ஆன்மாக்களுக்கு ஞான உபதேசம் செய்து வருக’ என்று நியமிக்கும் வண்ணம் அனுபூதி நிலையைப் பெற்றவர் இவர் என்பது. இரண்டு : தாம் நிட்டை கூடிய நிலையில், தம்மையே நோக்கி நிட்டை கூடி விட்ட ஆனந்த பரவசரின் நிலையினைக் கண்டு, எஞ்சிய சீடர்கள், தம் முதல் குருநாதர் ஸ்ரீ குருஞானசம்பந்தரின் சந்நிதியில் நின்று தங்களுக்குக் குருநாதரைக் காட்டுங்கள் என்று விண்ணப்பித்த பொழுது, நிட்டை கலைந்து மீண்டும் எழுந்தருளி வந்து சச்சிதானந்த தேசிகரைக் குருவாக உணர்த்தியருளி, மறுபடியும் நிட்டை கூடினார்கள் என்பது. உலக மதங்களுள் ஒன்றான கிறிஸ்துவ வரலாற்றில் ஏசுநாதர் மீண்டும் எழுந்தார் என்று கூறுவர். காவிரி ஆற்றங்கரையில் நம் தருமை ஆதீனத்தில் மீண்டும் எழுந்தருளி அருள் கூட்டிய அற்புதம் நிகழ்ந்துள்ளது என்பதை உலகச் சைவர்கள் எண்ணி எண்ணிப் போற்றுதல் தக்கதாகும்.

தருமையாதீனத் திருமடம் அமைந்த தருமபுரத்தில் மிகப்பெரிய தனித்த சிறப்புப் பிறிதொன்று உள்ளது. அது, தருமை ஆதீனத்தின் ஆதிகுருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஜீவசமாதி (நிட்டை) கொண்டருளிய ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் திருக்கோயிலும், தருமை ஆதீனத்தின் இரண்டாவது குருமூர்த்திகள் ஸ்ரீ ஆனந்த பரவசர் ஜீவசமாதி (நிட்டை) கொண்டருளிய குருமூர்த்த ஆலயமும் உள்ளமையே ஆகும்.

இத்தகு குருமுதல்வராம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய நூல்கள் எட்டு. அவை 1. சொக்கநாத வெண்பா 2. சிவபோக சாரம் 3. முத்தி நிச்சயம் 4. சொக்கநாதக் கலித்துறை, 5. ஞானப்பிரகாச மாலை, 6. சோடசகலாப் பிராசாதசட்கம், 7. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், 8. நவரத்தினமாலை என்பன. இவை, பண்டார சாத்திரங்கள் என்று குறிக்கப்பெறும். இவற்றைத் தருமையாதீனம், 'ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்' என்ற பெயரில் பன்முறை வெளியிட்டுள்ளது. இவற்றுள் இறைத்தோத்திரமாகிய சொக்கநாத வெண்பாவும் சாத்திர நூலாகிய சிவபோக சாரமும் தருமை ஆதினம் 25-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் அருளாட்சிக் காலத்திலும் தருமை ஆதீனம் 26- ஆவது குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாட்சிக் காலத்திலும் தனித்தனியே தெளிவுரையுடன் வெளியிடப் பெற்றுள்ளன. குறிப்புரை, தெளிவுரை ஆகியவற்றை எழுதியவர் மகாவித்துவான் அருணைவடிவேல் முதலியார் அவர்கள்.

சிவபோகசாரம், பாடல்கள், பொழிப்பு - அகலம், ஆங்கில மொழிபெயர்ப்பு என விரிவான முறையில், 1947, 1967 ஆகிய ஆண்டுகளில் 25-ஆவது குருமூர்த்திகளின் அருளாணை வண்ணம் வெளியிடப்பெற்றது. இந்நூல், தெளிவுரையுடன் 1978-ல் தருமை ஆதீனம் 26-ஆவது குருமூர்த்திகளின் அருளாணை வண்ணம் வெளியிடப் பெற்றுள்ளது.

சொக்கநாத வெண்பா, தெளிவுரையுடன் 1977,1978,1987, 1997 எனும் ஆண்டுகளில் தருமையாதீனம் 26-ஆவது குருமூர்த்திகளின் அருளாணை வண்ணம் வெளியிடப் பெற்றுள்ளது.

இப்போது, சொக்கநாத வெண்பா, சிவபோகசாரம் ஆகிய இரு நூல்களையும் இணைத்துத் தெளிவுரையுடன் மூன்றாம் பதிப்பாக

தருமையாதீனம் 26-ஆவது குருமகாசந்நிதானம்.

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

அவர்களின் திருவுளப் பாங்கின் வண்ணம்.

ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் சென்னையில் மார்ச் 8,9,10,11 தேதிகளில் நடைபெறும் அனைத்துலக சைவசித்தாந்த 5வது மாநாட்டில் காஞ்சிபுரம் எம்.முரளிதரன் நினைவாக லண்டன் திருமதி பிரேமா தம்பதியினரின் பொருளுதவியால் மாநாட்டு மலராக வெளியிடப்பெறுகிறது.

சொக்கநாத வெண்பா, தம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதரின் மீது குருமுதல்வர் கனிந்து உணர்ந்து பாடி அருளியது. வெண்பா யாப்பில் அமைந்தது.

சிவபோகம் என்பது, உள்ள மலம் நீங்கி ஓங்கிச் சிவானந்த வெள்ளத்தில் திளைத்து அதுவாய் மேவுகின்ற நிலையைக் குறிப்பது. அங்ஙனம் இருந்தருளும் குரு முதல்வர் தம் அனுபவ நிலையைச் சாரமாக வழங்கிய சாத்திர நூலே சிவபோகசாரம் ஆகும். இதுவும் வெண்பா யாப்பில் அமைந்ததே!

இவ்விரண்டு நூல்களையும் சைவ மெய்யன்பர்கள் ஓதி உணர்ந்து குருவருளும் திருவருளும் பெற்று உய்வார்களாக.

*ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின்*
*உத்தரவுப்படி*

**ஸ்ரீ ல ஸ்ரீ மாசிலமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள்**
**இளைய சந்நிதானம், தருமையாதீனம்.**

தருமை ஆதீனம்,
01-03-2018

# பொருளடக்கம்

## தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

**தருமை ஆதீனத்தை நிறுவியருளிய**

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

சீரணியும் நுதலின் விழி மழுமான் நாகம்
திருந்தும்ளரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணி அன்பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடிய பொழிற்கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன் இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

– ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியபிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவ மகவாக அவதரித்தார் ஸ்ரீ குருஞானசம்பந்தர். மதுரையம் பதிக்குத் தம் பெற்றோருடன் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டார். திருவருளால் பொற்றாமரைக் குளத்தில் ஈசானமூலையில் பெட்டகக் கோயிலுடன் ஸ்ரீ சொக்கநாதர் கண்ணுக்கினிய பொருளாகக் கைவரப் பெற்றார். சொக்கேசன் அருளால் திருவாரூர் சென்று ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரை வணங்கிச் சிவஞானோபதேசம் பெற்றார். சொக்கநாதர் பூசையும், எழுந்தருளச் செய்து கொடுக்கப்பெற்றார். குருவாணைப்படித் தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்து சைவ சித்தாந்தத்தைப் பரவச்செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதர் மீது சொக்கநாதவெண்பாப் பாடித்துதித்தார். சிவபோகசாரம், முத்திநிச்சயம், சொக்க நாதக்கலித்துறை, ஞானப்பிரகாசமாலை, சோடசகலாப்

பிராசாதசட்கம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், நவரத்தினமாலை ஆகிய நூல்களையும் அருளி சைவசித்தாந்தத்தைப் பரவச் செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுக்காலம் ஞான அரசாட்சிபுரிந்து சிவலிங்கத் திருவுருவின்கீழ்ஜீவசமாதி கூடினார் ஸ்ரீகுருஞானசம்பந்தர். அவர் ஜீவசமாதி கூடிய குருமூர்த்தம் தற்பொழுது ஸ்ரீ ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கிவருகிறது. கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ குருஞானசம்பந்தரால் தோற்றுவிக்கப் பெற்ற இத்தருமைஆதீனம் மொழித் தொண்டும், சமயத்தொண்டும், சமூகத்தொண்டும், ஒல்லும் வகையெல்லாம் ஆற்றிவருகின்றது.

ஸ்ரீ குருஞானசம்பந்தர் பரம்பரையில் தற்பொழுது இருபத்தாறாவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள். அவர்களால் தமது ஆதிபரமாசாரிய சுவாமிகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருப்பெயரில் நிறுவப்பெற்ற "ஞானசம்பந்தம் பதிப்பக" அறக்கட்டளை வெளியீடாக இந்நூல் வெளியிடப்பெற்றது.

உ

குருபாதம்

**தருமை ஆதீனக் குருமுதல்வர்**

**ஸ்ரீ குருஞானசம்பந்தர்**

**அருளிய**

# சொக்கநாத வெண்பா

ஆடரவஞ் சூழ்மதுரை அம்மானே அன்பருடன்
கூடவிளை யாடிவரும் கோமானே – நீடுபுகழ்
மென்மேலும் என் தனக்கு மேவியிடப் பொல்லாத
என் மேல் வினைகெடுப்பாயே. (1)

உரை: "ஆலவாய்" என்னும் பாம்பு சூழ்ந்து எல்லை காட்டிய மதுரை மாநகரின்கண் எழுந்தருளியுள்ள பெருமானே, அடியார்களுக்கு எளியவனாய் அவர்கள் முன்வந்து பலவிளையாடல்களைச் செய்த தலைவனே, அடியேனுக்கு நல்ல பெயரே மேலும்மேலும் உண்டாகும்படி, என்னைப் பற்ற வருகின்ற வினையைப் போக்கியருள்.

குறிப்பு : இதில் முதற்கண் மதுரை திருவாலவாயான திருவிளையாடலும், பின்பு அங்கு நிகழ்த்திய பல திருவிளையாடல்களும் குறிக்கப்பட்டன.

புண்கட்டு தோலைப் புதுக்கி மயக்கமுறக்
கண் கட்டுவித்தைபோல் காட்டுவாய்-பண்கட்டுப்
பூணுவேன் தன்னை இன்ப பூரணத்தில் பூண அருள்
தாணுவே சொக்கநா தா. (2)

உரை : என்றும் நிலைதிரியாது நிற்பவனே, சொக்கநாதப் பெருமானே! உள்ளே இருக்கும் அருவருப்புக்களை மறைத்துள்ள உடம்பின் மேல்தோலை

அழகாகச் செய்து மக்கள் அதில் மயங்கும்படி சாலவித்தைபோல இவ்வுலகத்தில் காட்டுகின்றாய். அப்படிக் காட்டுகின்ற உனது சாலத்தில் அகப்பட்ட என்னைப்பேரின்பமாகிய வெள்ளத்தில் மூழ்கும்படி செய்தருள்.

குறிப்பு : தாணு - அசையாது நிற்கும் தூண்.

ஏடாரும் நாரியரை ஐயோ யமன்பிடிக்கும்
பாடார் விதியென்று பாராமல் - கேடாரப்
பூண்டஆ பாசன்என்று போடா தெனையருளில்
ஆண்டவா சொக்கநா தா. (3)

உரை : சொக்கநாதப் பெருமானே, பூவை அணிந்த மகளிரை, "அந்தோ! இவர்யமன் பல உயிர்களையும் கவர்ந்து வர விடுக்கும் துன்பம் மிக்க தூதுவராவர்" என்று அஞ்சி அகல அறியாமல், கேடுமிகும்படி அவர்கள்பால் ஆசைமிக்க கீழோன் என்று தள்ளிவிடாமல், உனது கருணையால் என்னை ஆட்கொண்டவகை வியப்பு.

குறிப்பு : ஏடு - பூ இதழ்; ஆகுபெயர். விதி - ஆணை அதனை ஏற்ற தூதுவர். "போலி" எனப் பொருள்தரும். "ஆபாசம்" என்பது இழிவைக் குறிப்பதாயிற்று. போடாது. "போகடாது "என்பதன் மருஉ."ஆண்டவாறு" என்பது ஈறு குறைந்தது. "என்னை யின்னிதாயாண்டு கொண்டவா" (திருவாசகம் திருச்சதகம் 95) என்பது போல. இதில் பெண்ணாசையின் கொடுமை குறிக்கப்பட்டது.

காக்கைநரி ஞாளி கழுகுபருந் துக்கிரையாம்
ஆக்கையினை யானென் றலையாமல் - வாக்குமனம்
எட்டாத வீட்டில் எனைக்காட்டு துட்டருளம்
தட்டாத சொக்கநா தா. (4)

உரை : கொடியவர் மனம் எட்ட இயலாத சொக்கநாதப் பெருமானே, காக்கை, நரி, நாய், கழுகு,

பருந்து இவைகளுக்கே உணவாய்க் கெட்டொழிகின்ற இந்த நிலையில்லாத உடம்பையே நான் என்று மயங்கித் திரியாமல் (என்னை யான் அறிந்து இதனினின்றும் நீங்கி) வாக்கு மனங்களைக் கடந்த வீட்டில், அங்குள்ளார் என்னைக் காணும்படி காட்டியருள்.

குறிப்பு : ஞாளி - நாய்

பஞ்சமா பாதகனை ஆண்டபுகழ் பார்மீதில்
கொஞ்சமா வீறுபுகழ் கூறுமே – வஞ்சமே
பூண்டளவில் பாதகம்செய் பொல்லாத நாயேனை
ஆண்டளவில் சொக்கநா தா. (5)

உரை : வஞ்சனையையே மேற்கொண்டு அளவற்ற பாவத்தைத்செய்த, கொடிய, நாய் போன்றவனாகிய என்னை ஆட்கொண்ட அளவற்ற கருணையையுடைய சொக்கநாதப் பெருமானே. பஞ்சமாபாதகங்களையும் செய்த ஒருவனை இந்தப்பூமியிலே நல்லோனாய் விளங்கும்படி ஆட்கொண்ட உன்னுடைய புகழ் சிறிதோ ! அதனை உனது பெரும்புகழ் நூலாகிய புராணம் விளக்கமாகக் கூறுகின்றதே !

குறிப்பு : இதில் மாபாதகந் தீர்த்த திருவிளையாடலைக் குறிப்பிட்டு, “அத்தகைய கருணையை யான் இன்று அனுபவமாக உணர்கின்றேன்” என்று அருளிச்செய்தபடி. “ஆண்ட” என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று,

வறிஞர் தமையொக்க வைக்குமன்னர் போல
அறிஞர் தமையாள்வ தன்றிப் – பொறிபுலனால்
வெம்புவேன் தன்னை விடுத்தாள்வ தேபாரம்
சம்புவே சொக்கநா தா. (6)

உரை : சம்புவே, சொக்கநாதப்பெருமானே, அறிவுடையோரை ஆட்கொள்வது உனக்கு அருஞ்செயலன்று; ஒன்றும் இல்லாத வறியவரை மிக்க பொருள் வழங்கித் தமக்குச் சமமாக வாழவைக்கின்ற

மன்னர் உளராயின் அவரைப்போல, பொறி புலன்களால் துன்புறுகின்ற அறிவிலியாகிய என்னை அத்துன்பத்தினின்றும் விடுவித்து ஆட்கொள்வதே உனக்கு அருஞ்செயலாகும் .

குறிப்பு "அதனைச்செய்" என்பது குறிப்பு. சம்பு - இன்பத்தை உண்டாக்குபவன், உவமை - இல்பொருள் உவமை.

என்னால் உனையடைய வல்லேன் எனில்இடரில்
இந்நா ளளவும் இருப்பேனோ – பன்னாகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரைநகர்
ஆண்டவா சொக்கநா தா. (7)

உரை : பல பாம்புகளை ஆபரணமாகப் பூண்டவனே, சடையை உடைய தூயோனே, மதுரை மாநகரத்தைப் பாண்டியனாய் இருந்து ஆண்டவனே, சொக்கநாதப் பெருமானே, உனது உதவியின்றி, எனது ஆற்றலாலேயே யான் உன்னை அடைய வல்லவனாய் இருப்பின் இந்நாள் வரையிலும் துன்பத்திலே இருந்து கொண்டிருப்பேனோ !

குறிப்பு "இன்றியமையாததாகிய உனது உதவியை நீ என்று தருவாயோ," என்றபடி, "காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" (திருமுறை - 6 - 95 - 3) என்பது முதலிய திருவாக்குகளைக் கண்டு, உயிர்களின் சுதந்திரம் இன்மையை உணர்க.

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய
பொல்லாக் கருத்தகற்றப் போகாதோ – வல்லாடும்
பொங்கரா வேணிப் புனிதா மதுரைநகர்ச்
சங்கரா சொக்கநா தா. (8)

உரை : இரவிலே படமெடுத்து ஆடுகின்ற சினம்மிக்க பாம்பு பொருந்திய சடையை உடைய தூயோனே, மதுரை நகரிலே எழுந்தருளியுள்ள சங்கரனே, சொக்கநாதப்

பெருமானே, நீ உண்மையிலேயே எல்லாம் வல்ல சித்தனாய் இருக்கும்பொழுது என்னுடைய பொல்லாத குணத்தைப் போக்கியருளுதற்குத் தடை என்னை?

குறிப்பு : என்றக்கால் - என்று சொல்லும்பொழுது "தடையாவது எனது பக்குவம் இன்மையே" என்பது கருத்து. அல்-இரவு. "நஞ்சுடைமை தான் அறிந்து நாகம் கரந்துறையும்" (மூதுரை - 25) இரவிலே உலாவுவதாம் "அல்லா டரவம் இயங்கும் சாரல் அண்ணா மலையாரை" (திருமுறை 1 69 11) என்றதும் காண்க. "அஞ்சி ஒடுங்கியிருக்கும் பாம்பை அஞ்சாது உலாவக் கொண்ட சித்தர்" என்பது நயம். இனி, "வல்லாடு" என்றே கொண்டு "வலியனவாய் ஆடுகின்ற" என்றும் பொருள் கொள்ளலாம்.

பேசாநு பூதி பிறக்க என துளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய் – தேசாரும்
சிற்பரா நந்தா திருவால வாயுறையும்
தற்பரா சொக்கநா தா. (௩)

உரை : ஒளி நிறைந்த ஞானமும், பெரிய ஆனந்தமுமே உருவான வடிவுடையவனே, திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் தத்பரப்பொருளாம்மேலானவனே சொக்கநாதப்பெருமானே, சொல்ல வாராத உண்மை அனுபவம் எனக்கு நிலைத்தற்பொருட்டு, எனது உள்ளத்தில் குடிகொண்டுள்ள ஆசையாகிய பேயைத் துரத்தியருள்.

குறிப்பு : "அனுபூதி" என்பது முதல் குறைந்து நின்றது. "ஆரிடம்" என்க. அனுபூதி நிலையிலேயே நிலைத்திருக்க ஒட்டாது வெளியே கொணர்ந்து அலைவித்தலால், ஆசை பேயாக உருவகிக்கப்பட்டது. சித்-ஞானம் பரம்-மேன்மை. பர + ஆனந்தம் = பரானந்தம்; வடமொழித்தீர்க்கசந்தி. தத் + பரம் = தற்பரம்.

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரம்தா - சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா. (10)

*உரை : உலகங்களில் சிறந்த பூவுலமாகிய முடிக்கு, அதன் உச்சியில் விளங்கும் சூளாமணியாய்ச் சிறந்து நிற்கின்ற மதுரையில் எழுந்தருளியிருக்கும் சொக்கநாதப் பெருமானே, அடியேன் எத்தனையோ முறை இறந்தும் பிறந்தும் இளைத்துப் போனேன். ஆகையால், யான் இனி மறந்தாயினும் பிறவியில் செல்லாத வரத்தை எனக்குக் கொடுத்தருள்.*

*குறிப்பு : பிறவியிற் செல்லுதலாவது உலக இன்பத்தை விரும்புதல்; ஆதலால், அதை மறந்தும் விரும்பாதவரத்தை வேண்டியதாம். ஞாலம் - பூமி "இடம்" என்னும் பொருளைத் தருகின்ற "வாய்" என்பது இங்கு "உலகம்" எனப்பொருள் தந்தது. "வானிடத் தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச்சிப்பர்" (சிவஞானசித்தியார்-சூ-2-92) என்பன முதலியவற்றில் மண்ணுலகின் சிறப்புப்பேசப்படுதல் அறிக.*

உலக வெறுப்பும் உடல்வெறுப்பும் உள்ளத்
திலகு மலவெறுப்பும் - அலகிறந்த
நந்தாத இன்பசுக நாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநா தா. (11)

*உரை : சொக்கநாதப் பெருமானே! அளவற்றதும் என்றும் கெடாததும் ஆகிய இன்பத்தையுடைய வீட்டுலகத்தின்மேல் விருப்பம் உண்டாதற்கு உலகத்தின்மேல் வெறுப்பு, உடலின்மேல் வெறுப்பு, உள்ளத்தில் பொருந்தியுள்ள மலத்தின்மேல் வெறுப்பு இவற்றையெல்லாம் தந்து அருள்வாய்.*

குறிப்பு : "சுக நாடு" என்பது வாளா பெயராய்நின்று "வீட்டுலகம்" எனப் பொருள் தந்தது. "சுகம்" வடமொழியாதலின் சகர ஒற்று மிகாதாயிற்று. "மின் பெருமையாம் சகத்தைவேண்டாமை - தன்பால் - உடலைத்தினம் பழித்தல்.......நடலைப்பிறப்பொழியும் நாள்" என்றார் சிவபோக சாரத்திலும்.

எப்போது மும்மலம்விட் டேறுவேன் பூரணமாய்
எப்போதுன் இன்பசுகத்(தெ)ய்துவேன் - எப்போதும்
நித்தியா சுத்தா நிராமயா சொல்தவறாச்
சத்தியா சொக்கநா தா. (12)

உரை : என்றும் அழியாதவனே, பரிசுத்தனே, மலநோய் இல்லாதவனே, ஒரு காலத்தும் பொய்யாகாத வரத்தைத் தருபவனே, சொக்கநாதப் பெருமானே, எப்போது எங்கும் பரிபூரணமாய், துன்பத்தொடு கூடாத இன்பத்தை அடைவேன்? சொல்லியருள்.

குறிப்பு : இவ்வாறு வினாவியது. "விரைவில இவற்றைத் தந்தருளவேண்டும்" என்பது குறித்தற்பொருட்டு. ஆமயம் -நோய். "இன்பம்" என்பதை, "துன்பக் கலப்பற்ற இன்பம்" என வைத்துப் பின் அதனை "சுகம்" என்பதனோடு இரு பெயரொட்டாக ஆக்கி, "பேரின்பம்" என்னும் பொருளில் வழங்குவர் ஆசிரியர்.

காயமோ காலன் கருத்தோ மகாகாலன்
ஞாயமோ சற்றும் நடப்பதில்லை - பேயனேன்
மாளுவனோ தென்மதுரை மாமணியேஎன்னையுகந்
தாளுவையோ சொக்கநா தா. (13)

உரை : தென்னாட்டில் உள்ள மதுரை மாநகரில் விளங்கும் சிறந்தமாணிக்கமே, சொக்கநாதப்பெருமானே, "பிறவி வருவதோ, பின் யமதூதன் என்னைக் கொண்டு போக வேண்டும் என்று நினைப்பதோ, அவன் கொண்டு

போய் விட்டபின் யமன் என்னைப்பற்றித் தீர்ப்புக் கூறுவதோ இவைகளெல்லாம் ஒரு சிறிதும் நடவாது" என்றும் "ஆசையால் பேய்போல அலையும் நான் சாவமாட்டேன்" என்றும் எண்ணி இறுமாத்தற்கு நீ என்னை விரும்பி ஆட்கொள்வாயோ !

குறிப்பு : "மாளுவனோ" என்பதன்பின் "என்றற்கு" என ஒரு சொல் எஞ்சி நின்றது. இவ்வாறன்றி "ஆளுவையேல்" எனப் பாடம் ஓதுதல் சிறக்கும்.

எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ
அரி அயற்கும் வாசவற்கும் யார்க்கும் – பெரியவர்க்கும்
பூணுமே தந்தொழில்நின் பொன்னருளால் தென்மதுரைத்
தாணுவே சொக்கநா தா. (14)

உரை : தென் மதுரையில் உள்ள நிலையானவனே, சொக்கநாதப் பெருமானே, பிரமன், திருமால், இந்திரன் என்னும் பெரிய தேவராயினும் மற்றும் எந்தத் தேவராயினும், முனிவராயினும் அவரால்நிகழும் செயல்கள் யாவும் உனது அரிய திருவருளால் நிகழ்வனவே யல்லது, அவரால் நிகழ்வன அல்ல; அஃது எவ்வாறு எனில், ஒழுகக்காய்ச்சப்பட்ட இரும்பு பிற பொருள்களை எரிக்கின்றது என்றால் அங்கும் அந்த இரும்பில் உள்ள நெருப்பே எரிப்பதல்லது இரும்பு எப்பொழுதேனும் எரிப்பதாகுமோ !

குறிப்பு : இஃது எடுத்துக்காட்டுவமை, பூணும்- பொருந்தும்; "தம் தொழில் நின் பொன்னருளால் பூணும்" என்க.

ஆரிடத்தில் வந்தும் அடியேன் உளத்திருந்தும்
ஓரிடத்தில் உற்பவித்தும் உள்ளபடி – பாரிடத்தில்
நாயேன் உளமகிழ நன்றா உணர்த்திடுவாய்
தாயே நீ சொக்கநா தா. (15)

உரை : சொக்கநாதப் பெருமானே, நீ யார் மூலமாக வாயினும் என் உள்ளத்திலே மறைந்து நின்றாயினும் பூமியில் எந்த இடத்திலேனும் எவ்வகையிலேனும் தோன்றிக் காட்சியளித்தாயினும் அடியேனது உள்ளம் தெளிவுபெற்று மகிழ்ச்சியடையும்படி உண்மையைச் செம்மையாக உணர்த்துகின்றாய். ஆகையால், நீ எனக்குத் தாயே ஆவை!

குறிப்பு : குருவழியாக அன்றிப் பிறர் வழியாகவும் சிலவற்றை உணர்த்தியருளுதல் பற்றி, ஆரிடத்தில் வந்தும் என்றார். இதனை படர்க்கையில் நின்று அருளுதல் என்பர். உள்ளத்திருந்து உணர்த்துதலை, தன்மையில் நின்று அருளுதல் என்றும், எவ்விடத்திலேனும் தோன்றி நின்று அருளுதலை, "முன்னிலையில் நின்று அருளுதல்" என்றும் கூறுவர். "உற்பவித்தும்" என்றது வெளிப்பட்டு நிற்றலையேயாம்.

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச் –சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா. (16)

உரை : மலம் இல்லாத தூயவனே, சொக்கநாதப் பெருமானே, நீ என்றோ ஒருநாளன்றி நாள்தோறும் எந்த வகையிலேனும் வந்து எனக்கு அறிவை மிகுதியாகத்தந்து உள்ளத்தில் தோன்றும் மயக்கத்தைப் போக்கிப் பேரின்ப நிறைவில் இரண்டறத் தோய்விப்பாய்.

குறிப்பு : ஆன்ம போதம் ஆடைபோல அழுக்குறுவதாகலின், "அதனை இடைவிடாது விளக்கியருளல் வேண்டும்" என்றும், "அப்பொழுதுதான்பேரின்பநிறைவில் அழுந்துதல் கூடும்" என்றும் வேண்டியருளினார்.

மறைஆ கமவிதியும் வந்தவுடல் தன்னின்
நிறையூழ் விதியுமுன்னா நின்றேன் - மறைவிதிக்கே
ஏற்கவே செய்வேன் இசைந்தாலூழ் வேறெதனோ
டார்க்காவென் சொக்கநா தா. (17)

*உரை: என் உடையவனாகிய சொக்கநாதப் பெருமானே, வேதாகம விதிப்படி செய்யவேண்டிய செயல், எடுத்த உடம்பில்வந்து பொருந்துகின்ற ஊழ்வினைக் கேற்பச் செய்ய வரும் செயல், இரண்டையும் அடியேன் செய்ய எண்ணினாலும், செயலில் வேதாகம விதிப்படி செய்யும் செயல்களையே செய்கின்றேன். இந்நிலையில் என்னிடத்தில் வரும் ஊழ்வினை எதற்கு அல்லது யாருக்கு உரியதாகும்?*

*குறிப்பு : யாருக்கும் உரியதாகாத உடலளவாய் உயிரை வாதியா தொழியும் என்பது கருத்து. எஞ்ஞான்றும் இறை பணியிலே நிற்கும் ஞானிகளை ஊழ்வினை தாக்காமை*

``ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானம்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டேயிருப்பர்``

எனவும்(சிவஞானசித்தியார் சூ.10.5)

``ஆக்கும்முடி கவித்தரசாண் டவர்கள் அரிவையரோடு
அனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்``

*எனவும் (சிவஞானசித்தியார் சூ8.35) விளக்கினமையால் அறியப்படும்.*

நலம்விளைக்கும் உன்பதத்தில்நாடவைப் பதல்லால்
மலம்விளைக்கும் சோறருந்த வைத்தாய் சலம்விளைக்கும்
சென்னியா மாமதுரைச் செல்வாஎல் லாம்வல்ல
தன்னியா சொக்கநா தா. (18)

உரை : கங்கையை உலகிற்குத் தந்த திருமுடியை உடையவனே, பெரிய மதுரை நகரில் எழுந்தருளியுள்ள திருவருட்செல்வனே, எல்லாம் வல்ல தூயோனே, சொக்கநாதப்பெருமானே, அடியேனை, நன்மையை உண்டாக்கும் உனதுதிருவடியையே நினைந்து அதில் இருக்கச் செய்வதை விட்டு, வயிற்றில் மலத்தை உண்டாக்குகின்ற சோற்றை உண்டு கொண்டு மயங்கி இருக்க வைத்துவிட்டாய் (இது நன்மையாகுமோ)

குறிப்பு : உன் பதத்தில் அதனையே நாடியிருக்க வைப்பதல்லாமல் என்க."அல்லாமல்" என்பது, "விடுத்து" என்னும் பொருளைத் தந்தது.

ஆர்வந்தென் ஆர்போயென் ஐயாஉன் ஆனந்தச்
சீருளத்தே என்றும் செறிந்திலதேல் – காரிருண்ட
கண்டனே ஓர்புருடன் காதல்கொண்டாள்போல் மதுரை
அண்டனே சொக்கநா தா. (19)

உரை : மேகம்போல இருண்ட கண்டத்தை உடையவனே மதுரைக் கடவுளே யாவர்க்கும் தலைவனே, சொக்கநாதப் பெருமானே, ஓர் ஆடவனுக்கு அவனால் காதலிக்கப்பட்ட பெண் வந்து இன்பத்தைத் தாராமல், மற்ற எவர் வந்து என்ன செய்தால் என்ன பயன். அது போல, என்றுமே உனது இன்பம் எனது உள்ளத்தில் நிறைந்து சிறக்கவில்லையென்றால் எத்தனை உயர்ந்தோர் என்னிடம் வந்து கூடியிருந்தால் என். ஒருவரும் இல்லாமல் என்னை விட்டுப் பிரிந்து போயினால் என் (இரண்டினாலும் எனக்கு வரும் பேறும், இழப்பும் இல்லை)

குறிப்பு : சீர் - சிறப்பு. கொண்டாள் - கொள்ளப்பட்டாள். "கொண்டாள்போல்" எனச் சுருக்கமாகக் கூறப்பட்டாலும் பொருளுக்கு ஏற்பவிரித்துரைத்தலே கருத்து.

கான்ற சோறாயுலகம் காணவில்லை இன்ப வெள்ளத்(து)
ஊன்றி அடியேன் உறங்கவில்லை - ஏன்ற
இருள்சகல நீங்கவில்லை ஏழையேற் குன்றன்
அருளுறுமோ சொக்கநா தா. (20)

உரை : சொக்கநாதப் பெருமானே, இந்த உலகம் எனக்கு உண்டு கக்கப்பட்ட சோறுபோல அருவருக்கத் தக்கதாய்த் தோன்றவில்லை. (விரும்பத்தக்கதாய்த் தோன்றுகிறது) அடியேன் உனது இன்பவெள்ளத்தில்நிலையாய் அழுந்தி அமைதியுறவில்லை. (மனம் அங்கும் இங்குமாக அலைகின்றேன்) முன்பே அடைந்துள்ள கேவல நிலை சகல நிலை இவை என்னைவிட்டு நீங்கவில்லை. (இவை மாறிமாறி வந்து கொண்டேயிருக்கின்றன) இவ்வாறிருக்கும்பொழுது அறிவில்லேனாகிய எனக்கு உனது திருவருள் கிடைக்குமோ.

குறிப்பு : இருள் - கருவிகரணங்கள் கிடைக்கப்பெறாது அல்லது செயற்படாது ஒடுங்கிய நிலையில் ஆணவ சக்தி மிகுந்து அறிவை மறைத்திருக்கும் நிலை. இதுவே "கேவலம்" எனப்படுவது உறக்கம், பேருறக்கம் எல்லாம் கேவலமே. இவை நித்திய கேவலமாம். அநாதியில் தனு கரணங்கள் இன்றி இருந்தது அநாதி கேவலம். தனுகரணங்களைப் பெற்று அவை மீண்டும் செயற்படுகின்ற நிலை சகலம். அவை பிறப்பும், விழிப்புமாம். கேவல சகலங்கள் நீங்காமல் சுத்தமாகிய முத்தியை அடைதல் கூடாமையின், "இவை நீங்க வில்லையே" என்றார்.

நீயே பரமசிவன் ஆனக்கால் நின்மலனே
நாயேன் உளம்மகிழ நன்றாகப் - பேயேன்
கருத்தடங்க நின்கருணை காட்டியின்ப வெள்ளம்
அருத்திடுவை சொக்கநா தா. (21)

*உரை : இயற்கையிலே மலம் இன்றித் தூயவனாய் இருப்பவனே, சொக்கநாதப் பெருமானே, நீயே முழுமுதற் கடவுள் ஆகையால் நாய்போன்ற என் உள்ளம் மகிழ்ச்சி அடையும்படி, பேய்போல அலையும் எனது மனம் முற்றிலும் அடங்குமாறு உனது அருளைக்கொடுத்து, பேரின்பமாகிய மிக்க நீரை எனக்கு ஊட்டியருள். (உன்னைத் தடுப்பவர் இல்லை)*

*குறிப்பு : "பரமசிவன்" என்பது இங்கு யாவர்க்கும் மேலான முழு முதற்கடவுள் என்னும் பொருளில் வந்தது.*

விதிமார்க்கம் எப்பொழுது மேயறியேன் ஊழின்
விதிமார்க்கம் அல்லாது மெய்யாம் – கதிமார்க்கம்
காட்டுவாய் நாயேன் கரையேற எவ்வுலகும்
ஆட்டுவாய் சொக்கநா தா. (22)

*உரை : எல்லா உலகங்களையும் ஆட்டுவிப்பவனே, சொக்கநாதப் பெருமானே, அடியேன் "ஊழ்" என்று சொல்லப்படுகின்ற அந்தவிதி மார்க்கத்தைத்தவிர, வேதாகமங்கள் விதித்த விதிமார்க்கத்தைத் ஒரு போதும் அறிந்திலேன் ஆயினும், நாய் போன்ற யான் பிறவிக்கடலினின்றும் கரையேறும்படி (அருள் கூர்ந்து) பரமுத்தி மார்க்கத்தைக் காட்டியருள்.*

*குறிப்பு : "விதிமார்க்கம்" என்பது வேதாகமங்களின் விதி மார்க்கத்தையே குறிக்குமாகலின், அது எடுத்துக்கூற வேண்டாதாயிற்று. முத்திமார்க்கமாவன தவமும், ஞானமும் ஆம்.*

அருவருப்பே மெத்தியிடும் ஆகத்தைச் சற்றும்
அருவருக்கத் தோற்றுதில்லை ஐயோ – அருவருக்கத்
தோற்றியிடா தென்னவினை துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றியிடாய் சொக்கநா தா. (23)

*உரை : சொக்கநாதப் பெருமானே, உடம்பு மிகவும்*

அருவருக்கத்தக்க பொருள்களாலே ஆக்கப்பட்டிருந்தும் அதனைச்சிறிதும் அருவருக்கும் எண்ணம் எனக்குத் தோன்றாதிருப்பது அந்தோ! என்ன பரிதாபம்! நீயும் அந்த எண்ணத்தை எனக்குத் தோற்றுவியாதிருத்தற்கு என்ன காரணம்? எனது வினையை ஊட்டிக் கழித்தற்கோ! அதனைச் சொல்லிவிடு.

குறிப்பு : மெத்துதல் - செறித்தல். ஆகம் - உடம்பு. "சாற்றியிடாய்" என்பதில் "இடு" துணிவுப் பொருண்மை விகுதி.

தவமோ சிறிதறியேன் தாரணிமேல் செய்யும்
அவமோ அளவில்லை யானால் - சிவமோ
பெறுமாறென் கூடற் பிரானேமுப் பாசம்
அறுமாறென் சொக்கநா தா. (24)

உரை:மதுரைத்தலைவனே, சொக்கநாதப் பெருமானே, நான் தவச்செயலையோ சிறிதும் அறிந்திலேன்; இவ்வுலகத்தில் நான்செய்யும் அவச் செயலுக்கோ ஓர் அளவில்லை. இவ்வாறிருக்கும்பொழுது எனது மும்மலங்கள் நீங்கும்வழி யாது? அவை நீங்க யான் சிவத்தைப்பெறும் வழிதான் யாது? (நீதான் அதனைத் தெரிவித்தருளல் வேண்டும்)

குறிப்பு : ஓகாரங்கள் சிறப்புப் பொருளன.

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்துமுத்தி கூட்ட
மனத்துயரம் செய்தல் மருந்தோ -மனத்துயரம்
செய்யாமல் தீர்மருந்து சித்தா அறிந்திலையோ
ஐயாஎன் சொக்கநா தா. (25)

உரை : யாவர்க்கும் தலைவனே, எனது ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெருமானே! அனைத்துயிர்கட்கும் பாசமாகிய நோயை நீக்கி அவைகளை முத்தி இன்பத்தில் சேர்ப்பதற்கு அவைகட்குமனத்துயரத்தை

உண்டாக்குதல்தான் நீ கண்ட மருந்தோ? அவ்வாறில்லாமல் வேறு வகையாக அந்த நோயைப் போக்கும் மருந்தை எல்லாம் அறிந்த சித்தனாகிய நீ அறியவில்லையோ?

குறிப்பு : "அறுத்தும், கீறியும், சுட்டும் தீர்ப்பதாகவே வந்து பற்றிவிட்ட நோயை யார்தான் வேறு எவ்வாறு நீக்க முடியும்" என்பது கருத்து. "அறிந்திலையோ" என்ற குறிப்பால் "எல்லாம் அறிந்தவன்" என்பது விளங்கும்.

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல்நாயேன்
கணத்தும் உணரும் வகைகாணேன் -உணர்த்தியென்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா. (26)

உரை : சொக்கநாதப் பெருமானே, நீ அறிவித்தால் நான் அறிவேன். அறிவியாவிடில் ஒரு விநாடி யளவுகூட அறிவு நிகழக் காண்கிலேன். நீயே என் அறிவினுள் நின்று அறிவை உண்டாக்கி, முன்பே அதனை மூடியுள்ள ஆணவம் கன்மம், மாயை என்னும் மாசுகளைப் போக்கி, உனது பேரின்பத்துள் மூழ்குவித்து ஆண்டருள்வாய்.

குறிப்பு : "அறிவிக்க அன்றி அறியா உளங்கள்" (சிவஞான போதம் - சூ. 8. அதி.2) என விளக்கப்பட்ட உயிரியல்பை நினைக.

பிரிந்தேன் மலத்துனது பேரருளி னாலே
அறிந்தேன் உனைநன்றா ஐயா - செறிந்த இன்பப்
பூரணா செங்கமலப் பொற்பாதா கூடலில்வாழ்
ஆரணா சொக்கநா தா. (27)

உரை : யாவர்க்கும் தலைவனே, மிகுந்த இன்பநிறைவையும், செந்தாமரை மலர்போலும் திருவடிகளையும் உடையவனே, மதுரையில் எழுந்தருளியுள்ள, வேதப்பொருளானவனே, சொக்கநாதப்பெருமானே, உனது பெரிய திருவருளாலே

அடியேன் மலங்களினின்றும் நீங்கினேன்; உன்னையும் நன்றாக அறிந்தேன். (இனி எனக்கு என்ன குறை)

குறிப்பு : இத்தகைய உண்மை அனுபவத்தைப்பெற்ற ஆசிரியர், சிலபோது, ஒன்றும்பெறாத வறியவர்போல முறையிடுதல், உலகியல் சிறிது தோன்றியவிடத்தாம். இதனை,

``தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்`` (திருக்குறள் -422)
என்றது போலக் கொள்க.

கெடுங்காலம் வந்தால் கெடுப்பை கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை – கொடுந்தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினும் ஆரேனும்
அண்ணலே சொக்கநா தா. (28)

உரை : தலைவனே, சொக்கநாதப் பெருமானே, கடுமையான தவங்களைச் செய்யும் உயர்ந்தோராயினும், மலசக்தி அடங்காமையால் தற்போதம் மிகுந்து பிறப்பில் விழும் காலம் நிகழுங்கால் அவர்களை அவ்வாறே விழச்செய்வாய், ஆவுரித்துதின்றுழலல் முதலிய பாவத்தைச் செய்யும் இழிஞராயினும் மலபரிபாகம் உற்றுச் சத்திநிபாதம் வந்து உன்பால் அன்புசெய்து கரையேற்றப்படும் காலம் வந்த பொழுது அவர்களை அங்ஙனமே கரையேற்றி வாழ்விப்பாய். ("இவர்களில் எனது நிலையாதோ" என்றபடி)

குறிப்பு : "கெடுங்காலம்,கதிக்கே விடுங்காலம்" என்பவற்றிற்கு இவ்வாறு உரைத்தலே கருத்தாதல் அறிந்து கொள்க.

என்னவினை நாயேற் கிருக்குதோ இக்காயத்
தென்னவினை நின்தாள் இயற்றுமோ – என்னவினை
வந்திடுமோஎன்றறியேன் வந்தாலும் நின்அருளே
தந்திடுவாய் சொக்கநா தா. (29)

உரை : சொக்கநாதப் பெருமானே, நாயேனுக்கு எத்தன்மையான வினை எஞ்சியிருக்கின்றதோ! அதனை உனது திருவருள் இவ்வுடம்பில் எத்தன்மையான செய்கையால் ஊட்டுவிக்குமோ! இனியும் புதிதாக எத்தன்மையான வினை எனக்கு உரியதாய் உண்டாகுமோ! ஒன்றையும் அறியேன். எந்தவினை எப்படி வந்தாலும் உனது திருவருளை எனக்கு மறுக்காமல் தந்தருள்.

குறிப்பு : இருக்குது - "இருக்கிறது" என்பதன் மரூஉ அருளைத் "திருவடி" என்றல் மரபு.

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்தும் கன்மத்தும்
மாறாதெந் நாளும் மயங்காமல் - பேறாக
நித்தனே நின்மலனே நின்பதத்தில் ஆள்மதுரை
அத்தனே சொக்கநா தா. (30)

உரை : என்றும் அழியாதவனே, தூயவனே, மதுரையில் எழுந்தருளியுள்ள தலைவனே, சொக்கநாதப் பெருமானே, முப்பத்தாறு தத்துவங்களிலும், ஆணவத்திலும், கன்மத்திலும் அடியேன் கட்டுற்று நின்று இடையறாது மயங்குதலை ஒழித்து இன்பப்பேறு எனக்கு உண்டாகும்படி உனது திருவடியில் சேர்த்து ஆண்டருள்.

குறிப்பு : "முப்பத்தாறு தத்துவங்கள் இவை" என்பதைச் சித்தாந்த நூல்களில் கண்டுகொள்க. இத்தத்துவங்களே மாயாமலமாதல் அறிக. "நின்பதத்தில்" என்பதன் பின், "சேர்த்து" என ஒரு சொல் வருவித்துக் கொள்க.

அடியேன் உனைவேண்ட அப்படியே என்றும்
கொடியேன் கருத்திசையக் கூறி - அடியேனை
மீண்டும்பிற வாதுன் விரைமலர்த்தாள் சூட்டிஎனை
ஆண்டவனே சொக்கநா தா. (31)

உரை : அடியேன் உண்மைஞானத்தை உபதேசிக்கும்படி உன்னை வேண்டிக்கொள்ள, அதனை அப்படியே கொடியேனது உள்ளம் என்றும் உடன்பட்டுக் கொள்ளும்படி உபதேசித்து, மறுபடியும் பிறவியை எட்டாதபடி உனது மணம் பொருந்திய மலர்போலும் திருவடிகளை என் சென்னிமேற்சூட்டி என்னை ஆட்கொண்டவனே, சொக்கநாதப் பெருமானே! (உனது கருணைக்கு நான் என்ன கைமாறு செய்யவல்லேன்)

குறிப்பு : கொடுமை, செம்மைக்கு எதிரானது. அது முறை தவறி நடத்தலாம். "அங்ஙனம்" நடப்பவன்மேல் கருணை செய்தாய் என்றவாறு.

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி – நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்றஉயிர்க் கென்றும்
அளிப்பவன்நீ சொக்கநா தா. (32)

உரை : உயிர்களிடத்துக் கருணையுடையவனே, சொக்கநாதப்பெருமானே, ஞான குருவின் ஆன்ம சைதன்னியத்திலும், பக்குவம் வாய்ந்த உயிரின் உணர்வினுள்ளும் விளங்கி உயிர்களின் குற்றமாகிய ஆணவம் முதலிய பாசங்களை நீக்கி அணையிட்டுத் தடுக்கப்பட்ட வெள்ளம் அவ்அணை முரிந்தவுடன் தடையின்றி ஓடிவருதல்போலப் பாசங்களால் வெளிப்படாது நின்ற பேரின்பவெள்ளம் பெருகிவர அதன்கண் அமிழும்படி உயிர்கட்கு அருள்புரிபவன் என்றும் நீயேயன்றிப் பிறர் இல்லை.

குறிப்பு : சிவன் ஞான குருவின் சுத்தான்ம சைதன்னியத்தில் தயிரின்கண் நெய்போல இனிது விளங்கி நின்று பக்குவான்மாக்கட்கு ஞானத்தை உணர்த்தலை

"இவ்வான்மாக்களுக்குத் தமதுமுதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது. அவன் அன்னியமின்றிச்

சைதன்னிய சொரூபியாய் நிற்றலால்” என்னும் சிவஞானபோதத்தால் (சூ-8. அதி. -2) அறிக.

உயிர்களின் உணர்விலிருந்து உணர்த்துதல் விஞ்ஞானகலர்க்கு. “இவ்வாறெல்லாம் உணர்த்துதற்குக் காரணம் கருணையன்றி வேறில்லை” என்றற்கு, “ஒளித்திருந்த இன்ப வெள்ளம் ஒன்ற” என்றும் அருளிச்செய்தார்.

ஆற்றையணி வேணி அமலனே மெய்யதனில்
நீற்றைப் புனையும் நிமலனே-கூற்றைக்
குமைத்தவனே என்சிரத்துன் கோகனதத் தாளை
அமைத்தவனே சொக்கநா தா. (33)

உரை : கங்கையைச் சடையில்வைத்துள்ள தூயோனே திருமேனியில் வெண்பொடியைப் பூசும் மாசற்றவனே, இயமனை உதைத்தவனே, எனது தலையில் உனது தாமரை மலர் போன்ற திருவடியைப் பதித்தவனே சொக்கநாதப் பெருமானே, (உனது பெருமையை யான் என்ன சொல்லிப்பரவுவேன்)

குறிப்பு : கங்கையைச் சடையில் தரித்தது அவனது அளவில் ஆற்றலையும், நீற்றை அணிந்தது அனைத்துலகத்தையும் தன்பால் ஒடுக்கி நிற்கும் நிலையையும், கூற்றைக் குமைத்தது சார்ந்தாரைக்காக்கும் தகைமையையும், இவரது சென்னியில் திருவடி சூட்டியது பேரருள் திறத்தையும் குறிக்கும் குறிப்புடையன. “என் சிரத்து” என்றதற்கு, “எனது புல்லிய சிரத்தில்” என்றும், “உன்கோகனதத்தாளை” என்றதற்கு “உனது அரிய திருவடியை” என்றும் இசையெச்சத்தால் பொருள் கொள்ள நின்றன. இவ்வாறாகவே ஈற்றில் உரைக்கப்பட்ட குறிப்பெச்சமும் பெறப்பட்டது.

காலவசமோ கடியேன் வினைவசமோ
ஞாலவச மோஅருளை நாடியே-கோலமறச்
சிற்பரானந்தவெள்ளம் சேர்ந்தறிந்தும்சேர்கிலேன்
தற்பரா சொக்கநா தா. (34)

உரை : தற்பரனே, சொக்கநாதப் பெருமானே, உனது திருவருளை நோக்கிப் பிரார்த்தித்து, பிறவி நீங்கும் வகையில் ஞானத்தால் விளையும் பேரின்பத்தைப் பெற்றும் பெறாதவனாய் மெலிகின்றேன். இதற்குக் காரணந்தான்யாதோ? காலத்தின் வலிமையோ! கொடிய எனது வினையின் வலிமையோ! இவ்வுலகத்தின் வலிமையோ!

குறிப்பு : "அவ்வலிமையெல்லாம் உனது திருவருள் வலிமையின்முன் எவ்வளவின" என்பது குறிப்பு. கோலம் - வடிவம்; உடம்பு, அது பிறப்பைக் குறித்தது, பெற்றும் பெறாமையாவது, அவ்வின்பத்திலே இடையீடின்றி அழுந்தி இருக்கப்பெறாமை, பெறுதல்துரியமும், அழுந்துதல் அதீதமுமாம். "அவ் அதீதநிலை வாய்க்கப்பெற்றிலேன்" என்றவாறு. தற்பரன் என்பதன் பொருளை 9-ஆம் செய்யுட்குறிப்பில் காண்க.

நீள்நாள் பிறந்திறந்து நின்றதுயர் நீயறிவை
வீண்நாள் கழித்து விடாமலே - பூணஅருள்
நண்ணரிய பேரின்ப நாடி அதுவாக
அண்ணலே சொக்கநா தா. (35)

உரை : தலைவனே, சொக்கநாதப் பெருமானே அடியேன் நீண்ட நாள்களாகப் பிறந்து, இறந்து, அடைகின்ற துன்பத்தை நீ நன்கறிவாய், ஆகையால், இன்னமும் நாள்களை அப்படியே கழித்துவிடாமல், அடைதற்கரிய பேரின்பத்தை விரும்பிப்பெற்று அதுவேயாய் அழுந்திநிற்க அருள்செய்.

குறிப்பு : "பூண அருள்" என்பதை மூன்றாம் அடியின் முடிவில் கூட்டிப்பொருள் கொள்க, நின்ற துயர் - நின்றதனால் வந்த துன்பம்.

ஆறாது தத்துவத்தும் ஆணவத்தும் சாராமல்
மாறாத பேரின்ப வாரிதியே - பேறாகச்
சார்ந்திருக்க வல்ல சதுரர் உளத்ததுவாய்
ஆர்ந்திருக்கும் சொக்கநா தா. (36)

உரை : முப்பத்தாறு தத்துவத்திலும், ஆணவ மலத்திலும் சேர்ந்து நில்லாமல், என்றும் வற்றாத பேரின்பக் கடலையே தாம் அடையும் பேறாகக் கருதி அதை அடைந்துபின் அதினின்றும் நீங்காதிருக்கும் வன்மையையுடைய திறம் படைத்தவர்களது உள்ளத்தில் அந்த இன்பமே வடிவாய் நிறைந்திருக்கின்ற சொக்கநாதப் பெருமானே (அடியேனையும் அத்திறம் உடையவனாகச் செய்தருள்)

குறிப்பு : "சாராமல்" என்றதனால் இதுபொழுது அவற்றைத்தாம் சார்ந்திருத்தலைக் குறித்தார். இப்பாடலை மேல்வந்த 30ஆம் பாடலோடு ஒப்பவைத்துக் காண்க.

காடோ வனமோ கனகிரியோ காசினியோ
நாடோ சகலகலை ஞானமோ - வாடி
ஒடுங்குவதோ மெய்வீ டுயிர்க்களித்தல் போதம்
அடங்குவதோ சொக்கநா தா. (37)

உரை : சொக்கநாதப் பெருமானே, உண்மையான வீடுபேற்றை உயிருக்குத் தருவது காடு முதலியவற்றுள் ஒன்றோ? பட்டினிமுதலியவற்றால் உடல்மெலிவதோ? "நான்" என்னும் தற்போதம் அடங்குவதோ? சொல்லியருள்.

குறிப்பு : "முடிவில் சொல்லிய தற்போதம் அடங்குதலே வீட்டைத் தருவது" என்பது குறிப்பால்

விளங்கும். தாகத்தைத் தீர்ப்பது கடல் நீரோ? ஊற்று நீரோ? என்பதற்போல, காட்டில் இருத்தல் முதலியன இன்றியும் தற்போதம் அடங்கிவிடில் குற்றமில்லை; தற்போதம் அடங்காதபொழுது காட்டில் இருத்தல் முதலிய எவற்றாலும் பயனில்லை என்றபடி. "அளித்தல்" என்பது அளிப்பதன்மேல் நின்ற ஆகு பெயர். காடு-முல்லைக்காடு. வனம்-குறிஞ்சிக்காடு.

துன்றுபர மானந்தச் சோதியிலி ரண்டற்று
நின்றுவிட என்னை நிறுத்துவாய் – அன்று
கமலனே காண்பரிய கண்ணுதலே கூடல்
அமலனே சொக்கநா தா. (38)

உரை : பிரமனும், மாயோனும் போர் புரிந்த அன்று பிரமனே காண இயலாதவாறு நின்ற கண்ணுதற்கடவுளே, மதுரையில் எழுந்தருளியிருக்கும் தூயோனே, சொக்கநாதப்பெருமானே, பெருஞானத்தால் பெருகி நிறைகின்ற பேரின்ப வெள்ளத்தினின்றும் பிரியாதபடி அடியேனை அதிலே நிறுத்தியருள்.

குறிப்பு : "பரமானந்தச் சோதியில்" எனச் சொல் எழுந்ததாயினும், "சோதியால் விளைகின்ற பரமானந்தத்தில்" என அருளலே திருவுள்ளம் என்பது அறிக. சோதியாவது ஞானம், "கமலனே" என்ற ஏகாரம் சிறப்புணர்த்தி நின்றது, மாயோனும் கண்டிலனாயினும், பிரமன் "கண்டேன்" எனப் பொய் கூறிக் குற்றப்பட்டான் ஆதலின் அவன் காணாமையையே கூறினார்.

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ என்வினைகள்
எக்காலம் மும்மலங்கள் இற்றிடுமோ– எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோ என்னுளந்தான்
ஆனந்தா சொக்கநா தா. (39)

உரை : இன்ப வடிவானவனே, சொக்கநாதப்

பெருமானே, எனது வினை முதலிய மலங்கள் அற்றொழிதலும், அவை ஒழிந்தமையால் இந்த உடம்பு நீங்குதலும், இது நீங்கினமையால் எனது ஆன்ம அறிவு பேரின்பக் கடலுக்குள்ளே வெளிப்படாது மூழ்கியிருத்தலும் எந்தக் காலமோ! அறியேன்,

குறிப்பு : பின்னிற்றற்குரிய காயம் இறுதல், செய்யுள் நோக்கி முன்னின்றது. வினை, இங்குப் பிராரத்தம், ஆடுதல் - மூழ்குதல்.

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ - எக்காலம்
பேசாநு பூதி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநா தா. (40)

உரை : என் ஞானகுருவே, சொக்கநாதப் பெருமானே, எனது அறிவில் சொல்லிறந்த அதீத அனுபவம் தோன்றுதலும், அது தோன்றினமையால், எனது கருவி கரணங்கள் தம் சேட்டை அடங்குதலும், அவை அடங்கினமையால் காலந் தவறாது இவ்வுடலுக்குச் சோறிட்டுக் காத்தல் நீங்குதலும் எக்காலமோ! அறியேன்.

குறிப்பு : காரியம் உளதாலை முன்னரும் அவற்றிற்குக் காரணம் உளதாதலைப் பின்னரும் கூறினார். காரியத்தின் மேல் தமக்குள்ள விரைவுபற்றி, "பேசாநுபூதி" என்னும் தொடரியல்பு 9ஆம் செய்யுள் உரையில் கூறப்பட்டது.

வாக்கிலுரை பொய்யே மனம்நினைப்ப தும்கவடே
ஆக்கைதினம் செய்வ தகிர்த்தியமே - நோக்கில்
திரிவிதமும் இப்படிநீ செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநா தா. (41)

உரை : சொக்கநாதப் பெருமானே, எனது வாயில் வருகின்ற சொற்கள் எல்லாம் பொய்மையே, மனம் நினைப்பனவும் வஞ்சனையே, உடல் நாள்தோறும் செய்யும்

செயல்கள் யாவும் செய்யத்தகாத செயல்களே, ஊன்றி நோக்குமிடத்து முக்கரணங்களின் வழி நிகழும் மூவகை நிகழ்ச்சிகளும் இப்படியேயாக நீ செய்விப்பாயானால், எனக்கு நீ முத்தியைத் தரும் வகை எவ்வகை?

குறிப்பு : "நோக்கில்" என்றதனால் "உலகியலின்படி" பார்க்குமிடத்து மூவகையும் நல்லனவேயாய் இருப்பினும், அருளியலின்படி பார்க்குங்கால் அவை அதற்கு மாறானவையாம் என்பது கருத்தாயிற்று. அங்ஙனமாகவே, "முத்திக்கு வாயிலில்லையே" என இரங்கினமை விளங்கும். உயிர்களின் சுதந்திரம் அற்ற நிலை மெய்யுணர்ந்தோர்க்கு இனிது விளங்கலின், இப்படி நீ செய்வித்தால் என்றார்.

"சிந்தையைத் திகைப்பியாதே செறிவுடை அடிமைசெய்ய
எந்தைநீ அருளிச்செய்யாய் யாதுநான் செய்வதென்னே"

எனவும்,

"நெஞ்சினைத் தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே
வஞ்சமே செய்தி யாலோ வானவர் தலைவ னேநீ"
எனவும் வந்தனவுங் காண்க (திருமுறை 4-23 4-9) "இப்படியாக" என்னும் ஆக்கம் தொக்கு நின்றது.

இக்காலத் தின்னவினை என்றமைப்பை அப்படியே
அக்காலத் தவ்வூழ் அருத்திடுவை இக்காலம்
தப்புவார் உண்டோ தமியேற்கும் தப்பரிது என்
அப்பனே சொக்கநா தா. (42)

உரை : என் தந்தையே, சொக்கநாதப்பெருமானே "இப்பொழுது இவ்வினை பயன் விளைவிப்பதாக" என்று எல்லா உயிர்கட்கும் நீ முன்பே வரையறுத்து வைப்பாய். பின்பு அக்காலத்தில் அவ்வினையை அவ்வண்ணமே ஊட்டுவிப்பாய். இவ்வரையறையினின்றும் தப்புபவர் எவரேனும் உண்டோ! இல்லை என்றால், அடியேனுக்கும்

அதினின்றும் தப்ப இயலாதுதானே! (வீணே வருந்திப் பயன் என்!)

குறிப்பு : இவ்வுண்மையை உணர்ந்தேனாயின், பிராரத்துவத்தில் அழுந்தாது புசித்துப் போக்க வேண்டும் என்பது கருத்து. பின்னர்வந்த, 'இக்காலம்' ஊட்டுவிக்கும் காலம்.

மோகாபி மானமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாபி மானம் சிதையவில்லை - ஓகோ
உனையடைந்தும் பாசம் ஒழியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா. (43)

உரை : சொக்கநாதப் பெருமானே, மதுரையாகிய தலத்தை அடைந்தும், அதில் உள்ள மூர்த்தியாகிய உன்னை அடைந்தும் எனதுமலம் நீங்கவில்லை, எனதல்லாத பொருளை "எனது" என்னும் பொய்யாகிய புறப்பற்று முற்றிலும் அறிவைவிட்டுப் போகவில்லை. யானல்லாத உடம்பை "யான்" என்னும் அவ்வாறான அகப்பற்றும் அங்ஙனமே கெடவில்லை. எனது மலத்தின் வலிமை இங்ஙனம்மிகப் பெரிதாயுள்ளது.

குறிப்பு : மூர்த்தி தலங்களைக் கூறவே இனம்பற்றி, "பொற்றாமரைத் தீர்த்தத்தை அடைந்தும்" எனத் தீர்த்தமும் கொள்ளப்படும். அபிமானம் - பற்று. சிறப்புணர்த்தும் ஓகார இடைச்சொல் இருமுறை அடுக்கி வருங்கால் இரண்டாவதில் ககர ஒற்றுப் பெறுதல் பிற்கால வழக்கு. சிறப்பு இங்கு இழிவுச் சிறப்பு.

பத்திமெத்தச் சித்தம் பதியவில்லை அட்டமா
சித்தி அவாவெறுக்கச் செய்யவில்லை - முத்தியுளம்
கூடவில்லை எந்நாளும் கூடலிலேமாறி நடம்
ஆடவல்ல சொக்கநா தா. (44)

உரை : மதுரையிலே எக்காலத்தும் இடையறாது கால்மாறி நடனம் ஆடவல்ல சொக்கநாதப் பெருமானே, எனது உள்ளத்தில் பத்தி மிக ஊன்றவில்லை. அட்டமா சித்தியிலே உள்ள ஆசை வெறுக்கவில்லை. முத்தி பெறும் எண்ணம் வரவில்லை. (என்ன செய்வேன்)

குறிப்பு : "வெறுக்க" என்ற செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருள் தந்தது. "உண்ணத்தெரியாதவன் பேசத் தெரியாதவன்" என்றாற்போல இங்ஙனம் வருதல் பிற்கால வழக்கு. இதுவும் முன்னை வெண்பாப்போல மலவலியை விரித்ததாம்.

என்னைவளைபாச அரண்இன்னமுநீ கொள்ளவில்லை
அன்னையனே நீபதண மானாலும் – முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கும் ஓட்டும் அருட்சேனை
நாடியிடும் சொக்கநா தா. (45)

உரை : என் அன்னையாகிய மீனாட்சியம்மையை உடையவனே, சொக்கநாதப் பெருமானே, என்னைச் சூழ்ந்துள்ள பாசமாகிய கோட்டையை நீ தோன்றி உனதாக இன்னமும்கைப் பற்றிக்கொள்ளவில்லை. இவ்வாறு நீ உனது நகரத்தில் இனிதே இருந்துகொண்டிருந்தாலும், எந்த உயிர்க்கும் அதனை அனாதியே பற்றியுள்ள மலத்தைப்புறங் காட்டி ஓடும்படி ஓட்டுகின்ற உனது அருளாகிய சேனை அந்தக் கோட்டையை எப்படியும் நாடி வரவே செய்யும் (இஃது உறுதி)

குறிப்பு : "அன்னையனே" என்றது, திக்குவிசயத்தில் பலரது கோட்டைகளைக் கொண்டதடாதகைப் பிராட்டியை உடையவனே என்னும் குறிப்பினது. "தாய்போல்பவனே" என்றும் பொருள் கூறலாம். "பதணம்" என்பது மதில் உறுப்பினையேயன்றி அடைத்திருத்தலையும் குறிக்கும். பாச அரண் அருட்சேனை உருவகங்கள்,நீ வாளா இருப்பினும் உனது அருள் வாளா இராது என்பதாம்.

சேகரத்தி னுச்சியின்மேல் செந்தேனுக் கிச்சித்தே
போகவசம் ஆகுமோ போகாதார் - தாகம்
மிகஅறவே யுள்ளத்தில் வேண்டிலுன்தாட் செந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா. (46)

உரை : சொக்கநாதப் பெருமானே, மாமரத்தின் உச்சியில் உள்ள செந்தேனுக்கு ஆசைப்பட்டபோதிலும் அவ்விடத்திற்கு எல்லாராலும் போகமுடியுமோ! முடியாது. அங்ஙனம் முடியாதவர் போல மலதாகம் முற்றிலும் நீங்க மனத்தில் விருப்பம் கொள்ளினும் உன்னை அடையும்நெறியால் அடையமாட்டாதவர்க்கு உனது திருவடி இன்பமாகிய செந்தேன் அவர்களது உள்ளத்தில் வந்து பொருந்துமோ!

குறிப்பு : சேகரம் என்பது மாமரத்துக்கும் பெயர். இச்சித்தேயும் என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. இச்சித்தும் எனப்பாடல் ஓதலுமாம். எல்லார்க்கும் என்பது பொருளாற்றலால் பெறப்பட்டது.

அடியார் பரிபாகம் எல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற் பதத்தில் - கொடுபோய்
இருத்திடுவை சேர இனிமேலாம் போகம்
அருத்திடுவை சொக்கநா தா. (47)

உரை : சொக்கநாதப் பெருமானே, நீ உன் அடியார்களுடைய பரிபாக நிலைகள் பலவற்றையும் அறிந்து அவற்றிற்கு ஏற்பச் சிலரைக் கீழ்நிலையாகிய இப்பூமியிலே உன் அடியாராய் விளங்கிப் பலர்க்கு உபகரிக்கச் செய்வாய். சிலரை இப்பூமிக்கு மேலே உள்ள உருத்திர லோகங்களில் சேரும்படிக் கொண்டு போய் இருக்க வைப்பாய். சிலரை அனைத்துலகிற்கும் மேலான உனது சிவலோகத்தில் உள்ள பலநிலைகளில் இன்பத்தை நுகரப்பண்ணுவாய். (அவ்வகைகளை உயிர்களாகிய நாங்கள் எங்ஙனம் அறிவோம்!)

குறிப்பு : படி-பூமி. "அது கீழ்ப்புறம்" என்றமையால் "அங்குச் சிலரை வைப்பாய்" என்பது போந்தது. "மேற்பதத்திற்சேரக் கொடுபோய் இருத்திடுவை" என்க. "இனி" என்பது இயைபுணர்த்தி நின்றது. "போகம்" என்பது ஆகு பெயராய் அதன்கண் உள்ள இன்பத்தைக்குறித்தது.

வாழ்ஐம் மலத்தால் வருந்தி மிகஉடைந்த
ஏழையனுக்கையோ இரங்குவாய் -கோழையனாய்ப்
போனேன் புலப்பகையாற் பொன்னடியைநின்னருளால்
தானேதா சொக்கநா தா. (48)

உரை : சொக்கநாதப் பெருமானே, என்னிடத்திலே உறுதியாய், நிற்கின்ற ஐந்து மலங்களாலும்மிகவருந்தி மனம் உடைந்துபோனேன். ஐம்புலன்களாகிய பகைவரை எதிர்க்கும் வீரம் அற்ற கோழையன் ஆகிவிட்டேன். அந்தோ! இந்த எளியேன்மேல் இரக்கம் கொண்டருள்; இரங்கி உனது பொன்போலும் திருவடியை உனது அருள் ஆகிய காரணம் ஒன்றினாலே அடியேனுக்குத்தந்தருள்.

குறிப்பு : ஐம்மலம், "ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம்" என்பன. "ஐம்மலத்தாலும்" என்னும் முற்றும்மை தொகுத்தல் பெற்றது. "உடைந்த" என்பது பொருள் நோக்கித் தனித் தொடராகக் கொள்ளப்பட்டது. "வீரமாகிய காரணம் இன்மையால், அருளே காரணமாகத் தருதல் வேண்டும்" என்றவாறு. தான், அசை.

எக்காலம் தாகங்கள் இற்றிடுமோ காயங்கள்
எக்காலம் ஆசைசினம் இற்றிடுமோ - எக்காலம்
நல்லார் குணம் வருமோ நாதாஎல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா. (49)

உரை : தலைவனே, கலப்பினால் எல்லாமாகியும், பொருள் தன்மையால் அவற்றுள் ஒன்றும் அல்லாதவனாய்

இருப்பவனே, சொக்கநாதப் பெருமானே, எப்பொழுது வேட்கைகள் பலவும் ஒழியுமோ! எப்பொழுது சில பிறவிகளை வெறுத்துச் சில பிறவிகளை அடைய விரும்புதல் நீங்குமோ! எப்பொழுது ஞானிகளின் பண்பு எனக்கு வருமோ! (அறியேன்)

குறிப்பு : "எக்காலம் காயங்களில் ஆசை சினம் இற்றிடுமோ" என்க.

உள்ளமுனை அல்லாலொன் றுள்ளவில்லை நின்றொளிக்கும்
கள்ளமற நீயும் கருதவில்லை – எள்ளளவும்
நற்றவமோ செய்யவில்லை நாயேன் உனையடைதற்
கற்றதென்ன சொக்கநா தா. (50)

உரை : சொக்கநாதப் பெருமானே, என்னுடைய மனமோ உன்னைவிட்டுத் தானே சுதந்திரமாய் ஒன்றை நினைக்கமாட்டாது. நீயும் என் உள்ளத்தில் இருந்தும் இல்லாததுபோல் ஒளிக்கின்ற கள்ளத் தனத்தை விடக் கருதவில்லை. இந்நிலையில் நல்ல தவத்தை எள்ளளவும் செய்ய எனக்கு வாய்ப்பு இல்லை. இங்ஙனமானபோது, நாயேன் உன்னை வந்து அடைதற்கு அமைந்த காரணம் என்ன உள்ளது?

குறிப்பு : "ஒன்றும் இல்லை ஆகையால் உனது, கள்ளத் தனத்தை நீ விடவே வேண்டும்", என்பது குறிப்பு. "அற்றது" என்பதற்கு, "அறுதியாய் அமைந்தது" என்பது பொருள்.

ஆர்க்குக் கிடைக்கும் அடியேன்முன் வந்துமறைக்
கேற்கக் கருத்துக் கிசையவே – யார்க்கும்
தெரிவரியா வேதசிகை சித்தா உரைத்தாய்
அரிஅறியாச் சொக்கநா தா. (51)

உரை : சித்தமூர்த்தியே, திருமாலும் அறியாதசொக்கநாதப் பெருமானே, நீ அடியேன் என் முன் எழுந்தருளி வந்து, யாருக்கும் அறிதற்கரிய வேத முடிவின்

பொருளை அந்த வேதத்திற்கு ஒப்பவும், அடியேனது கருத்திற்கு இசையவும் உரைத்தருளினாய். இந்தப்பேறு யார்க்குக்கிடைக்கும்!

குறிப்பு : வேத சிகையை ஏற்கவும், இசையவும் உரைத்தாய்; இஃது ஆர்க்குக்கிடைக்கும் என்க. வந்தது குருவாகியாம், "வந்து உரைத்த உரையின் சிறப்பு அநுபவத்தால் விளங்கிற்று" என்றவாறு. சிகை, அதன்கண் உள்ள பொருள்மேல் நின்ற இடவாகுபெயர்.

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார் இட்டவரே
அவ்விதையின்போகம் அருந்துதல்போல் செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்வார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கம் சொக்கநா தா. (52)

உரை : சொக்கநாதப் பெருமானே, மக்கள் நிலத்தில் எந்தப்பயிரை இட்டார்களோ அந்தப்பயிரின் விளைவையே அவர்கள் உண்பதன்றி, வேறு பயிரின் விளைவை உண்ண இயலாது. அதுபோல் தீயவழியான செயல்களையே நன்கு பற்றிச் செய்பவர்க்குப் பிறப்பு உண்டாவதன்றி முத்தி உண்டாகாது; நல்ல வழியை நன்கு பற்றிச் செய்பவர்க்கே முத்தி உண்டாகும்.

குறிப்பு : இஃது எடுத்துக்காட்டுவமை. மார்க்கம் இரண்டும் ஆகுபெயர். இட்டவரே என்னும் பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்து போகம் என்பதனோடு கூட்டுக. செய்வார்க்கு, தோன்றும் என்பன. சன்மார்க்கம் முத்தி என்பவற்றோடும் முறையே சென்று இயைந்தன.

எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்
நல்லாங்கு தீங்கிதென நாடறியேன் - எல்லாரும்
நீரூரும் வேணி நிமலா மதுரையில்வாழ்
ஆரூரா சொக்கநா தா. (53)

உரை : கங்கை ததும்புகின்ற, ஒளிநிறைந்த சடையை உடைய தூயோனே, மதுரையிலும், திருவாரூரிலும் வாழ்பவனே, சொக்கநாதப் பெருமானே, எல்லாருடைய உள்ளங்களும் திருந்தி நலம்பெறும் வகையைத் தெரிந்து அவ்வாறு அவரவர்க்கு ஏற்கும்படி உண்மையை உரைக்க அடியேன் அறிந்திலேன். இனி, நல்லது இது தீயது இது, என்பதைப் பகுத்துணரவும் அறியேன். (நீயே என் சொல்லில் நின்று மக்கட்கு நலம் புரிதல் வேண்டும்).

குறிப்பு : இதம் - நன்மை "ஆகும்படி" என்னும் பொருளதாகிய "ஆக" என்பது ஈறுகெட்டு நின்றது. "உரைக்க" "நாட" என்பவற்றின் ஈற்று அகரம்தொகுத்தலாயின. "பொல்லாங்கு" என்பது போல "நல்லாங்கு" என்ற ஒரு சொல் கொள்ளப்பட்டது. அன்றி "ஆங்கு" என்பதை வேறுவைத்து "நன்மை" என்பது, "நல்" என நின்றது என்றலுமாம். "இது" என்பதை முன்னுங் கூட்டுக. "ஆரூரில் வாழ்தல் குருமூர்த்தியாய்" என்க.

உரை இறந்த பேரின்ப உல்லாச வீட்டில்
திரைஇறந்து தூங்கித் திளையேன் – வரைபெருகப்
பேசுவேன்யான் என்றே பெற்றவர்தம் உள்ளத்துக்(கு)
ஆசுவே சொக்கநா தா. (54)

உரை : "நான்" என்னும் தற்போதத்தை உடையவர்களது அறிவில் அதனை உண்டாக்குகின்ற மலசொரூபமாகவே இருப்பவனே, சொக்கநாதப் பெருமானே! சொல்லற்ற பேரின்பத்தை உடைய மகிழ்ச்சி மிக்கவீட்டில் அதனை மறைத்துள்ள திரைவிலகி ஒழியப் புகுந்து அமைதியாய் இன்புறமாட்டேன். சொற்கள் மலைபோலக் குவியும்படி பேசுவேன் (இஃது என் இயல்பாய் உள்ளது)

குறிப்பு : "இறந்து" என்பதனை "இறக்க" எனத்திரித்துக் கொள்க. ஆசு-குற்றம். இதன் ஈற்றுக்

குற்றியலுகரம் உயிர் வரக்கெடாதுநின்று, உடம்படுமெய்பெற்றது.

ஆறாது தத்துவமும் அத்திலுறை மூர்த்திகளும்
பேறாம் வினையினையும் பெந்தித்து-மாறாமல்
ஆட்டுவது நீயானால் ஆகா மியம்என்பால்
சாட்டுவதென் சொக்கநா தா. (55)

உரை : முப்பத்தாறு தத்துவங்களையும், அத்தத்துவங்கட்கு அதிதெய்வமாய் உள்ளாரையும், அவற்றைப்பற்றிக் கிடக்கின்ற எனது சஞ்சித கன்மத்தையும் நிலை பெயராமல் நிறுத்தி என்னை ஆட்டுவிப்பவன் நீயானபொழுது அந்நிலையில் நின்று நான் செய்கின்ற செயலை எனது செயலாக என்மேல் வைத்து வேதாகமங்கள் சொல்வது ஏன்?

குறிப்பு : "நான் செய்கின்றேன்" என்று எண்ணும் தற்போதத்தைவிட்டொழியாமல், கொண்டு நின்று செய்தல் பற்றித்தான் என்பது கருத்து. "தத்துவங்கள் சடமாகலின் அவற்றைச் செயற்படுத்த அதிதேவர்கள் உளர்" என்க. அவருட் சிலர் "வாயுதேவன் அக்கினிதேவன்" என்றாற் போல ஆண்பாலராயும், சிலர் "ஆகாயவாணி, பூமிதேவி கங்காதேவி என்றாற்போலப் பெண்பாலராயும் இருத்தல் அறிக. உண்மையில் எல்லாவற்றிற்கும் அதிபதி சிவபிரானே ஆகையால், அவனை அவ்வத் தத்துவங்களின் வைத்து தத்துவாதிபதயே நம: என்று சைவாகமங்கள் வழிபாடு கூறும் சஞ்சிதம் - பழவினை; அதற்குப் பற்றுக்கோடு மாயையாதலின், அஃது மாயையின் காரியமாகிய தத்துவங்களைப் பற்றி நிற்கும். ஆகாமியம் - புதுவினை; சாட்டுவது "சாற்றுவது" என்பதன் மரூஉ. ஆட்டுவது இங்குத் திரோதானமாய் நின்றதாதலின், அது மலத்தின் செயலாதலல்லது இறைவன் செயலாகாமை அறிக.

முன்அளவில் மாக்களுக்கு முத்திகொடுத்தஅருள்
என்அளவில் சும்மா இருப்பதேன்-முன்அளவில்
சீர்பெற்றா ரேல்உன் திருவருளொத் தாசையன்றி
ஆர்பெற்றார் சொக்கநா தா. (56)

உரை : சொக்கநாதப் பெருமானே, எனக்குமுன் அளவற்ற ஆன்மாக்களுக்கு முத்தியைக் கொடுத்த உனது திருவருள் என்பொருட்டுமட்டில் வாளா இருந்ததற்குக் காரணம் யாது? முன்பு முத்தி பெற்றவர்கள் அதற்குரிய தகுதிகளை அளவிறந்த வகையில் பெற்றிருந்தார்கள் என்றால், உனது திருவருள் உதவியின்றி யாரேனும் தகுதி பெற்றவர் உண்டோ!

குறிப்பு : "அந்த உதவியை எனக்குச் செய்தல் கூடாதோ" என்பது குறிப்பு. "ஆன்மாக்கள்" என்பது முதற் குறையாய், "மாக்கள்" எனவந்தது. உதவியை "ஒத்தாசை" என்றல் வழக்கு.

நோயால் வருந்தியுனை நூறுகுரல் கூப்பிட்டால்
நீயாரெ னாதிருக்கை நீதியோ தாயாய்
அலைகொடுத்த கேழல் அருங்குழவிக் கன்று
முலைகொடுத்தாய் நீயலவோ முன். (57)

உரை : இதன் பொருள் வெளிப்படை.

குறிப்பு : நோய், வினை நோய், உடல் நோயுமாம் என்பது பன்மை குறித்து நின்றது. "தாயாய்" என்பதை ஈற்றடியின் முதலிற் கூட்டி உரைக்க. அலை - அலைத்தல்; கொல்லுதல்; முதனிலைத் தொழிற்பெயர். "அலைக்கு" என்னும் நான்கனுருபு தொகுத்தல் பெற்றது. கொடுத்தது உயிரை, கேழல் -பன்றி. பன்றிக்குட்டிகட்கு முலைகொடுத்த திருவிளையாடலைக் காண்க. இத்திருவிளையாடலை.

"ஏனக்குருளைக் கருளினைப் போற்றி" எனவும் (போற்றித் திருவகவல் - 166)

"ஏவுண்ட பன்றிக் கிரங் கியீசன்
எந்தை பெருந்துறை ஆதி அன்று
கேவலம் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வார்எம் பிரானாவாரே"

எனவும் (திருவார்த்தை - 6) திருவாசகத்துள்ளும் சிறந்தெடுத்து ஓதியருளப்பட்டது. இதில் "சொக்கநாதா" என்பது தொடர்ச்சியால் வந்து இயைந்தது. "அன்று, அல்ல" என்பன ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவாய் வருதல் பிற்கால வழக்கு.

தாயர் மகவருத்தம் சற்றும் தரியார்கள்
ஆயவினைக் கீடா அமைத்தாலும் - காயம்
பரிக்கும் துயரமெல்லாம் பார்க்கஉனக் கென்றும்
தரிக்குமோ சொக்கநா தா. (58)

உரை : சொக்கநாதப் பெருமானே, தாய்மார் தம் குழவியின் வருத்தத்தைப் பார்க்கச் சிறிதும் பொறார்கள். அதுபோல, எனக்கு நீ துன்பத்தை எனது பழவினைக் கீடாகக் கூட்டினாலும்,உடல் வழியாக நான் அதனை அனுபவிக்கும் பொழுது உனக்கு என்றும் பார்க்கப் பொறுக்குமோ! பொறாது.

குறிப்பு : மகவு, சொல்லால் அஃறிணையாதலின் இங்குப் பன்மையாயிற்று. காயத்தால் என உருபுவிரிக்க. தரிக்குமோ என்பது, தரித்தல் உண்டாகுமோ என்னும் பொருட்டாய் நின்றது. தரியாயாயினும், தாயார் மருந்தை வருத்தியும் ஊட்டுதல்போல, வினையை ஊட்டுவிக்கின்றாய் என்றபடி.

தீவினையால் இன்னமின்னம் தேகமுறச்செய்வையோ
தீவினையற் றுன்மயமாய்ச் செய்வையோ - தாவிதமாய்
இன்னபடி மேல்விளைவ தென்றறியேன் ஈதறிந்த
அன்னையே சொக்கநா தா. (59)

உரை : சொக்கநாதப் பெருமானே, தீய தன்மையுடைய எனது வினைகாரணமாக யான் இன்னும் பலமுறை உடம்பெடுக்கும்படி செய்வாயோ? அல்லது வினை நீங்கி நான் நீயாம்வண்ணம் ஆக்குவாயோ? மாற்றங்களில் எவ்வாறான மாற்றம் இனி விளைய இருக்கின்றது என்பதை நான் அறியேன். இதனை அறிந்த அத்தன்மை உடையை நீயே.

குறிப்பு : தீமை, இரண்டிடத்தும் இனச் சுட்டில்லா அடையாய் வந்தது. தீமை, பிறப்பை உண்டாக்குதல். தாவிதம் - தாவுகின்ற (மாறி மாறிச் செல்கின்ற) வகை. அன்னை - அத்தன்மை உடையை; "தாய்போல்வாய்" என்றுமாம்; இதன் பயனிலையாகிய "நீ" என்பது எஞ்சி நின்றது.

என்னதியான் என்பதுவும் யான்பிறர்செய் தாரெனலும்
மன்னுமதி பாதகமேல் வாஞ்சைகளும் – இன்ன மின்னம்
சொல்லுகின்ற இச்செயல்நீ தூண்டு தலற்றென் செயலால்
அல்லவே சொக்கநா தா. (60)

உரை : சொக்கநாதப் பெருமானே, "யான் எனது" என்னும் பற்றுக்களும் "யான்செய்தேன், பிறர் செய்தார்" என்னும் மயக்கங்களும் நீங்காத மிக்க பாவம் என்றால் அந்தப் பற்றுக்களும், மயக்கங்களும் உனது தூண்டுதல் இல்லாமல் எனது சுதந்திரத்தால் ஆவன அல்லவே!

குறிப்பு : "அந்தப் பாவத்தை என்மேல் ஏன் சுமத்த வேண்டும்" என்பது குறிப்பு. மலத்தின் தூண்டுதலை உனது தூண்டுதலாக உபசரித்துக் கூறுகின்றனர். ஆதலின், அந்தப் பாவம் என்னுடையதாகின்றது என்பது கருத்து. இத்தூண்டுதல் இறைவனது இயற்கையாகாது, மலத்தினாலாம் செயற்கையாகிய திரோதானமாதல் அறிக.

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம் - பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா. (61)

உரை : திருநீற்றினால் பால்போன்ற ஒளியால் நிறைந்த திருமேனியை உடையவனே. நான்மாடக் கூடலாகிய மதுரை மாநகருக்கு அரசியாகிய மீனாட்சியம்மைக்குத் தலைவனே, நீ தேவர்கள் பொருட்டு நஞ்சைக் கண்டத்தில் தரித்த உருவினனாயும், திருவாலவாயில் உள்ள சொக்கலிங்கமாயும் அவ்விலிங்கத்தில் மூலமாய் நின்று பல இடங்களில் பல வகையாய்த் தோன்றியுள்ள இலிங்கங்களாயும் நின்று அருள் செய்கின்றாய்.

குறிப்பு : "உன்னை ஆன்மார்த்தமூர்த்தியாகப் பெற்ற எனது பேறு பெரிது" என்பது குறிப்பு. முதலில் நின்ற "லிங்கம்" என்பது, "வடிவு" என்னும் பொதுப் பொருளில் வந்தது. "நிலவுலகத்தில் உள்ளார்க்குக்கயிலையில் சீகண்ட பரமசிவனாய் நின்று அருளுகின்றாய்" என்பார், அதனை முதற்கண் கூறினார். மதுரையில் உள்ள சொக்கலிங்கமே ஏனை இலிங்கங்கட்கெல்லாம் மூலலிங்கம் என்பது திருவிளையாடற்புராணத்தில் காணத்தக்கது. இத்தலத் திருத்தாண்டகத்தில் "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி" என்பதிலும் இக்குறிப்பு உளது என்பர். பலவாறாய்த் தோன்றுதலாவது சுயம்பு, தைவதம், அசுரம், இராக்கதம், ஆரிடம், மானுடம் முதலியனவாய் உண்டாதலாம்.

எல்லாம் உனதுபதம் எல்லாம் உனதுசெயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால் - பொல்லாத
மாதுயரம் நீங்கும் மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநா தா. (62)

உரை : சொக்கநாதப் பெருமானே, உனது திருவடியிலே அன்பு கொண்டு, எல்லாப் பொருளும் உனது திருவடியை இடமாகக் கொண்டு இருப்பனவே; எல்லாச் செயலும் உனது செயலே. எல்லாப் பயனும் உனது திருவருளால் விளைவனவே. இவ்வாறு அறிந்து முனைப்பு அற்றிருந்தால் கொடிய, பெரிய துயரங்களும் நீங்கிவிடும் (அவ்வாறிருக்க இயலவில்லையே, என் செய்வேன்)

குறிப்பு : பதத்தில் நிற்பனவற்றை, "பதம்" என்றது ஆகுபெயர். "இருந்தால்" என்பது இருத்தற்கு அருமை குறித்து நின்றது. தொகுக்கப்பட்டு நின்ற "மாதுயரமும்" என்னும் இழிவு சிறப்பும்மையால் சிறு துயரங்கள் நீங்குதல் தானே பெறப்பட்டது.

தீதாம் அவாநந்தச் செய்மதுரை வாழ்வேந்தா
நாதா சிவாநந்தம் நல்குவாய் – வேதா
சிரகரா நித்தா திரபரா சுத்தா
அரகரா சொக்கநா தா. (63)

உரை : மதுரை மாநகரில் அதற்கு அரசனாய் வாழ்கின்றவனே, யாவர்க்கும் தலைவனே, வேதப் பொருளாய் உள்ளவனே,பிரம கபாலத்தைக்கையில் கொண்டவனே, மேலானவனே, தூயோனே, "அரனே, அரனே" என்று அடியாரால் துதிக்கப்படுவனே, சொக்கநாதப் பெருமானே, தீமையைத் தருகின்ற ஆசை கெட்டொழிதல் வழியாக உனது பேரானந்தத்தை எனக்குக் கொடுத்தருள்.

குறிப்பு : "அவாக்கெடுமாற்றால் ஆநந்தம்நல்குவாய்" என்றதனால், அவாவை முன்னர்க் கெடுத்தருள் என்பதும், பெறப்பட்டது. "நாதா" எனப்பின்னர்வருதலின்,"வேந்தன்" என்றது, அந்நகருக்கேயாயிற்று. "அர" என்றது அண்மை விளி. அதனையடுத்து, "ஹர" என்னும் ஆரியச் சொல்லின் முதல் தொடர்மொழியடையில் ககரமாய்த் தற்பவமாய்

விளியேற்றது. "அரகரா" என்பது துதி மொழியாதலின், அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது.

மற்றொருவர் தஞ்சமின்றி வந்தடைந்தக்கால் எனைநீ
சற்றுமிரங் காதிருக்கை தன்மையோ - கொற்றவா
பாவலா கூடற் பரமா பரதேசி
காவலன் நீ தானானக்கால். (64)

உரை : மதுரை நகர் அரசனே, மதுரை நகர்ப்பாவலனே, யாவர்க்கும் மேலானவனே, நீ "பரதேசி காவலனாய்" இருக்கும்பொழுது வேறொருவரும் திக்கில்லாமல் உன்னிடம் நான்வந்து அடைக்கலம் புக, நீ எனக்குச் சிறிதும் இரங்காதிருத்தல் அழகோ!

குறிப்பு : "எனை" என்றது வேற்றுமை மயக்கம். கூடற் கொற்றவா, பாவலா எனக்கூட்டுக. இறைவன் மதுரையில்பாவலனாய் வந்தமையைத் தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடலிலும், "பரதேசி காவலன்" ஆனமையை அங்கம் வெட்டிய திருவிளையாடலிலும் காண்க. பரதேசி காவலன் அயல் நாட்டிலிருந்து வருபவனைக் காப்பாற்றுபவன். இங்கும் "சொக்கநாதா" என்பதை வருவித்துக்கொள்க.

தன்னந் தனியே தமியேன் முறையிட்டால்
இன்னந் திருச்செவியில் ஏறாதோ - மன்னவனே
தென்மதுரை மேவித் திருந்திய செங் கோல் செலுத்தும்
தன்மதுரை நீயலவோ தான். (65)

உரை : சொக்கநாதப் பெருமானே, நீ தென்னாட்டில் உள்ள மதுரையில் அரசனாய் இருந்து சிறந்த ஒரு செங்கோலைச் செலுத்திய தருமதுரை அல்லவோ! அவ்வாறிருக்க, நான் தன்னந்தனியே துணையின்றி வந்து நீண்ட காலம் முறையிட்டும் அஃது இன்னமும் உனது திருச்செவியில் ஏறாதது ஏனோ!

குறிப்பு : இதனுள்ளும் "சொக்கநாதா" என்பதை வருவித்துக்கொள்க. "தன்னந்தனி" தனிமையின் மிகுதியுணர்த்துவதோர் இரட்டைச் சொல், "கன்னங் கறுத்தது", செக்கச்சிவந்தது முதலியனபோல. "ஓகாரம்" ஏறாமைக்குரிய காரணத்தின் மேல் நின்றது. தான், அசை.

என்போல் மலகடினர் எவ்விடத்தும் கண்டதுண்டோ
இன்பே மதுரைக் கிறைவனே – அன்பேதும்
இல்லா தெனையாண்ட எண்ணத்தால் தேவரீர்
எல்லாமும் வல்லசித்த ரே. (66)

உரை : இன்ப வடிவானவனே, மதுரை நகருக்கு அரசனே, சொக்கநாதப் பெருமானே, என்னைப்போல ஆணவ மலம் மிக வன்மையாகப் பொருந்தப் பெற்றவரை எந்த இடத்திலாயினும் நீ கண்டது உண்டோ! அத்துணை மலவன்மையால் உன்னிடத்தில் அன்பு சிறிதும் இல்லாத என்னை, உனக்கு அன்பனாக்கி ஆட்கொண்ட கருணையால் "நீ எல்லாம் வல்ல சித்தனே" என்பது தெளிவாகிவிட்டது.

குறிப்பு : "கடினரை" என்னும் இரண்டனுருபும், "இல்லாத" என்பதன் ஈற்று அகரமும் தொகுத்தல்பெற்றன. "தேவரீர்" என்பது விளிப்பெயர். "அப்பா,ஐயா" போன்ற விளிப்பெயர்கள் முதல்வேற்றுமையாய் நிற்றல் பிற்கால வழக்கு. உயர்த்தற்கண், ஒருமை பன்மை மயங்கின. தகுதி பற்றியே இறைவன் ஆட்கொண்ட போதிலும், அவனது கருணையன்றித் தம் தகுதி பெரியோர் உள்ளத்துத் தோன்றாமை இயல்பாதலை,

"கல்நார் உரித்த கனியே போற்றி" (திருவாசகம் - போற்றி - 97)
"இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏலம் ஏலும்நற் குழலி பங்கனே
கல்லை மென்கனி ஆக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்"

*(திருச்சதகம் - 94) என்றாற்போலும் திருமொழிகள் பற்றியும் உணர்க.*

நீயே யொளித்திருப்பை நீ என்றும் காணாமல்
நீயே யொளித்தபடி நின்னருளால் - நீயேதான்
காட்டஅநந்நியமாக் கண்டேன் உனதுவிளை
யாட்டதென்ன சொக்கநா தா. (67)

*உரை : சொக்கநாதப் பெருமானே, நீ என்றும் எனக்குத் தோன்றாமல் நீயாகவே மறைந்திருக்கின்றாய். (அதனால் அப்பொழுது உன்னை நான் எவ்வகையிலும் காண முடியவில்லை) பின்பு உனக்கு இயல்பாய் உள்ள அருளால் நீயாகவே உன்னை எனக்குக் காட்ட நான் உன்னை என்னின் வேறல்லாதவனாகக் கண்டேன்; உனது விளையாடல்தான் என்னே!*

*குறிப்பு : அநந்நியம் - வேற்றுமையின்மை;அத்துவிதம்*

*"காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே*
*காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக் காலே"*

*(திருமுறை 6.95 3)என்று அருளிச்செய்தது காண்க.*

பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் - பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா. (68)

*உரை : சொக்கநாதப் பெருமானே, அடியேன், உன்னிடத்தில் மிகுந்த அன்புடையவனல்லேன்; உனக்கு யாதொருபிழை செய்யாதவனுமல்லேன்; மெய்யன்பு, பொய்யன்பு என்னும் இருவகை அன்பில் ஒருவகை அன்பும் இல்லாதகுறைபாடுடையேன். எனக்கு நீயே எனது குறைவுடைய நிலையையும், உனது நிறைவுடைய*

நிலையையும் உணர்த்தி, உன்பால்மிகுந்த மெய்யன்பு தோற்றுவித்து அது வழியாக உனது பேரின்பமாகிய தொட்டிலிலே என்னைக் குழவியாகக் கிடத்தி, யான் துன்புற்று அழாமல் அடங்கி என்னை மறந்து தூங்கச் செய்தல் வேண்டும்.

குறிப்பு : மெய்யன்பு, பயன் கருதாக அன்பு. பொய்யன்பு, ஒரு பயன் கருதி அது காரணமாகச் செய்யப்படும் அன்பு. பொய்யன்பு, மெய்யன்பு விளைதற்குக் காரணமாகும். "லுப்தம்" என்னும் ஆரியச்சொல் "குறை" என்னும் பொருளையுடையது. அதினின்றும் பிறந்த தற்பவம் "உலுத்தன்" என்பது. இஃது "உலோபி" என்றும் வரும். "பேரன்பு காட்டி" என்பது "உனைக் காட்டி" என்பதன்பின் கூட்டியுரைக்கத்தக்கது. "என், உன்" என்பன ஆகுபெயராய் அவரவர் இயல்பை உணர்த்தின. உறங்குங்குழவி போல சொல்லும், செயலும் அற்று, அநுபூதியில் இருக்கச் செய்தல்வேண்டும் என்பார் பேரின்பத்தைத் தொட்டிலாக உருவகம் செய்தார். இனி "தொட்டில்" என்றது திருவடியை எனக்கொண்டு "இன்பத்தை உடைய தொட்டில்" என்றதற்கு ஏற்ப, அழுத்துதலை "ஆட்டி" என்றார். "ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானமுழுத்தல்" (உண்மை விளக்கம் - 36) என்றது காண்க.

இட்டா சனத்தில் இரவுபக லற்றிடத்தில்
முட்டா திருக்கஅருள் முற்றுந்தா - அட்டாங்க
யோகந்தா நீங்கி யொழியாச் சிவானந்த
ஆகம்தா சொக்கநா தா. (69)

உரை : சொக்கநாதப் பெருமானே, இராப் பகல் அற்ற இடத்தில் அன்பாகிய ஆசனத்தினின்று பிறழாது அமர்த்திருக்குமாறு உனது திருவருளை எனக்கு நிரம்பக் கொடுத்தருள். பின் அந்த இடத்தில் அந்த ஆசனத்தில்

அமர்ந்து செய்வதாகிய அந்த அட்டாங்க யோகத்தைத் தந்தருள். பின் அதுவழியாக, ஒரு காலத்தும் நீங்குதல் இல்லாத சிவாநந்தமாகிய அழிவற்ற உடம்பைத் தந்தருள்.

குறிப்பு : இட்டம் (இஷ்டம்) - அன்பு; இட்டாசனம் வடமொழித் தீர்க்கசந்தி. இரவு பகல் - கேவல சகலங்கள், அவை அற்ற இடம் சுத்தாவத்தை; முத்தநிலை. "அட்டாங்க யோகம்" எனக்கூறப்பட்டதாயினும், அதன்முடிநிலையாகிய "சமாதி" என்றலே கருத்து. இரவு பகல் அற்ற இடத்தில் அன்பு ஆசனமாக இருந்து கூடும்சமாதி நிட்டையேயாதல் அறிக. பொதுவான யோகத்தைச் செய்வார் பௌதிக அழியாவுடலைப் பெற்று நெடுங்காலம் இருப்பர். அஃது எனக்கு வேண்டா; பரமுத்தியே வேண்டும் என்பார் "சிவாநந்த ஆகம்தா" என்றார். "நீங்கியொழியா" ஒரு சொல்தன்மைத்து.

மோகங் கரைய முழுதும் மலம்கரைய
ஆகங் கரையஅறி வானந்த – மோகமாய்ப்
பூரணமாய் எங்கெங்கும் பொங்கி எழவிழித்த
ஆரணனே சொக்கநா தா. (70)

உரை : வேதப் பொருளாய் உள்ளவனே, சொக்கநாதப் பெருமானே, எனதுமயக்க உணர்வு அற்றுப்போகும் படியும், ஆணவ மலம்முழுதும் தனது சத்திகெட்டு ஒழியும் படியும், இந்த உடம்பும் தொடர்பு அற்றுப்போகும்படியும் ஞானத்தால் விளைகின்ற இன்பம் ஒன்றே எங்கும் நிறைந்த தாய் நான் பற்றுமிடங்களில் எல்லாம் பொங்கி மேல்எழும் படியும் உனது திருக்கண்நோக்கத்தைச் செய்து அண்டருள்.

குறிப்பு : ஞானமும், ஆனந்தமும் கூறவே இனம்பற்றி அவற்றிற்கு முன்னே உள்ள "சத்து" என்பதும் கொள்ளப்படும்.

ஊனது வானவுட லோடும்அணு காமலருள்
ஆனசிவ போகமது வா யருள்வாய் - ஞானக்
கரும்பொருளே வாழ்மதுரைக் கண்ணுதலே ஆர்க்கும்
அரும்பொருளே சொக்கநா தா. (71)

உரை : ஞானமே உருவாய் உள்ள பெரிய பொருளாய் உள்ளவனே, மதுரையில் வாழ்கின்ற கண்ணையுடைய நெற்றியை உடையவனே, யாவர்க்கும் கிடைத்தற்கு அரிதான பொருளானவனே, சொக்கநாதப் பெருமானே, புலால் உருவாய் உள்ள உடம்போடு இனி அடியேன் என்றும் பொருந்தாமல் (பிறவியிற் செல்லாமல்) அருளுருவான சிவபோகமேயாய் இருக்கும்படி அருள்செய்.

குறிப்பு : "ஆக" என்பது ஈறுகெட்டு நின்றது. கருமை - பெருமை. இனி, "கருப்பொருள்" என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றதாக வைத்து, "ஞானத்திற்கு முதலாயுள்ள பொருளே" என உரைப்பினுமாம்.

பூண்டமலம் மாண்டுவிடப் போந்தசிவா னந்தவெள்ளத்
தாண்டுமெனை மீண்டுவிட லாகுமோ - நீண்டமால்
வீரென்பார் தாரா விமலா எனைக்கண்டார்
ஆரென்பார் சொக்கநா தா. (72)

உரை : உலகத்தை அளக்க நிமிர்ந்து நின்ற மாயோனது முதுகெலும்பை வீணையாகவும், ஏனை எலும்புகளை மாலையாகவும் உடையவனே, தூயோனே, சொக்கநாதப் பெருமானே, என்னை அநாதியேபற்றியிருந்த ஆணவமலம் ஒழிந்து போக, பின்பு வெளிப்பட்டுப் பெருகிய சிவானந்தமாகிய வெள்ளத்திலே என்னை மூழ்கவிட்டு ஆட்கொண்ட பின்பும் என்னை நீ கைவிடுதல் கூடுமோ? கைவிட்டால் தமியனாய் அலமலரும் என்னைக் கண்டவர்கள் என்னை "ஆர்" என்று சொல்வார்கள்?

(சொக்கநாதன் அடிமை; இப்படி அலைகின்றான் என்றுதான் சொல்வார்கள்; அஃது உனக்குப் பெருமையோ?)

குறிப்பு : "திருமால் திருவிக்கிரமாவதாரம் கொண்டு மாபலியை அடக்கியபின் குறுகமுடியாது நிற்க, சிவபிரான் வயிரவ மூர்த்தியாய்ச் சென்ற அவ்வடிவைப் போக்கி முதுகெலும்பை வீணையாகக் கொண்டார்" என்பது வரலாறு. பிறர் எலும்பு மாலைகளோடு மாயோனது எலும்பும் சிவபிரானுக்குமாலையாதல் இயல்பு. மூன்றாம் அடியில் உள்ள "என்பு" என்பதை "மால்" என்பதற்கும் கூட்டுக. "வீர்" என்பது ஒலிக் குறிப்பாய் வீணையைக் குறித்தது. இனி, "வீறென்பார் எனவும்", "ஈரென்பார் எனவும் பாடத்தை" வேறாக ஓதி, அவற்றிற்கு ஏற்பவும் உரைத்தல் பொருந்தும்.

"வீர. என்றன்னை விடுதி கண்டாய்!
விடில் என்னை மிக்கார்
ஆரடியான் என்னில், உத்தர
கோச மங்கைக்கரசின்
சீரடியார் அடியான் என்று
நின்னை சிரிப்பிப்பன்"

எனவும் (திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம் - 48 )

"எற்றுக்கடிகேள், என்கண் கொண்டீர்? நீரே பழிப்பட்டீர்" எனவும் (திருமுறை - 7-95-2) போந்த திருமொழிகளும் காண்க.

முன்னை மலமகற்றி மூதறிவா னந்தமயந்
தன்னை யறிந்த தபோதனருள் -என்னையுநீ
ஆண்டுபரிச் சொக்கநா தாந்தமருள் கூடலிலே
தாண்டுபரிச் சொக்கநா தா. (73)

உரை : மதுரை மாநகரிலே (முன்பு பாண்டியன்

காணத்) தாவிச் செல்கின்ற குதிரைமேல் வந்த சொக்கநாதப் பெருமானே, அநாதியான ஆணவ மலத்தைப் போக்கிப் பேரறிவாய் விளையும்பேரானந்தத்தை நுகரும் தவத்தவருள் என்னையும் ஒருவனாக நீ ஆட்கொண்டு, பின்பு அவர் நுகரும் பேரின்பத்தில் நானும் திளைக்கும்படி நாதத்தையும் கடந்துள்ள உனது திருவடியை எனக்கு அளித்தருள்.

குறிப்பு : ஆண்டு - ஆட்கொண்டு. உபரி - பின். சொக்க இன்பத்தில்திளைத்திருக்க. "நாதாந்தத்தை அருள்" என மூன்றாம் அடியிலும், "தாண்டுபரி - தாவிச்செல்கின்ற குதிரை" என நான்காம் அடியிலும் பொருள்காண்க. இவ்விரண்டடிகள் "திரிபு" என்னும் சொல்லணி பெற்றன.

கருணா நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே - ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா னந்தமே
ஆங்காண்நீ சொக்கநா தா. (74)

உரை : திருவருளாகிய பெருஞ்செல்வத்தை உடையவனே, இறைவனே, அடியார்க்குக் கைப்பொருளாய் உள்ளவனே, பேரின்பத்தையுடைய வீடுபேறாய் நிற்பவனே, சொக்கநாதப்பெருமானே, எனது அறிவினின்றும் ஒரு நாளும் நீங்காது நிற்கின்ற நிலைத்த இன்பமாவது நீயே; இஃது உண்மை.

குறிப்பு : கருணாநிதி, உருவகம். நிதியை உடையானை "நிதி" என்றது உபசாரம். பொற்பு -சிறப்பு; வீட்டை, "சிறப்பு" என்றல் நூல்வழக்கு. காண், முன்னிலை அசை, "சுகானந்தம்" என்பதை, மேல் "இன்பசுகம்" என்றது போலக்கொள்க. ஏகாரத்தைப் பிரித்து "நீ" என்பதனோடு கூட்டுக. "ஆம்" என்பதை, இஃது என்னும் தோன்றா எழுவாய் பெற்று வேறு தொடராகக்கொள்க.

நீரிலே மூழ்கிலுமென் நித்தமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் பணியிலுமென் - வேரிலே
உற்றிருந்தா லன்றோ உயிர்க்குறுதி ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா. (75)

உரை : பொருள் தன்மையால் உலகத்தோடு ஒன்றாதல் இன்றியும் கலப்பினால் உலகத்தின் வேறாதல் இன்றியும் இருப்பவனே, சொக்கநாதப் பெருமானே, ஆன்மலாபத்தின் பொருட்டு உடம்பு தண்ணீரிலே முழுகினால்தான் என்ன பயன்? நாடெங்கும் சென்று பலதலங்களை வணங்கினால் தான் என்ன பயன்? உள்ளம், எல்லாவற்றிற்கும் முதல்வனாகிய உன்னைவிட்டு நீங்காது பொருந்தியிருந்தாலன்றோ அது கிடைக்கும்.

குறிப்பு : "மனத்தொடு படாது உடலளவாகச் செய்யும் பூசை முதலியவற்றால் பயன் இல்லை" என்பது கருத்து. "பயன்" என்பதும், ஞானமும், வீடும் ஆகியபெரும்பயனையே. "வேர்" உவமையாகு பெயர். இது, முன்னிலைப்படர்க்கை போலக் கூறியதாம். "உயிர் குறுதி" என்பதன் பின் "உண்டாகும்" என்னும் பயனிலை எஞ்சிநின்றது. "ஒன்றும் என்னும் எண்ணும்மை" தொகுத்தலாயிற்று.

என்செயலே என்றென்றி யற்றுவதும் என் செயலும்
உன்செயலே என்றென் றுணர்த்துவதும் -நின்செயல
தாகுமே என்ன அடியேற் குணர்த்தலும்நீ
ஆகுமே சொக்கநா தா. (76)

உரை : சொக்கநாதப் பெருமானே, எதைச் செய்தாலும் அதை நான் என் செயலாகவே மயங்கிச் செய்தலும் அவ்வாறின்றி, "எல்லாம் உன் செயலே" என நான் உணர்வது மட்டுமின்றிப் பிறர்க்கும் உணர்த்துவதும் உனது அருளால் ஆவனவே என்பதை அடியேன்

உணர்கின்றேன். அவ்வுணர்வைத் தருபவனும் நீயேயன்றோ.

குறிப்பு : பின் வந்த "என் செயல் எதனைச் செய்தல்" என இரண்டாவதன் தொகை. அதனையே முதற்கண் கூட்டி "எதனைச் செய்தலையும்" எனக்கொள்க. "உணர்த்துவது" என்ற பிறவினையால் "உணர்வது" என்னும் தன்வினையும் பெறப்பட்டது. இஃது "உணர்தல்" எனவே முன்வந்த "இயற்றல் உணராமையாயிற்று". "உணர்த்தல்" என்பது ஆகுபெயராய், அதனைச் செய்வோனைக் குறித்தது "ஆகும்" என்னும் செய்யும் என முற்று முன்னிலைக்கண் வந்தது ஆரிடம்.

ஈண்டுமெனை ஆண்டிலையேல் என்வினைக்கீ டாயானே
வேண்டும் பவங்களில்நீ விட்டாலும் - பூண்டருளால்
அங்கங்கே என்னோ டனன்னியமாய் என்னுருவில்
தங்கியருள் சொக்கநா தா. (77)

உரை : சொக்கநாதப் பெருமானே, உன்னைப் பூசிக்கப் பெற்ற இந்தப் பிறப்பிலும் நீ என்னை உன் அடியவனாக ஆட்கொள்ளாது விட்டுவிடுவையாயின், அது காரணமாக என் வினைக்கீடாக யான் விரும்பும் பிறப்பிலே நீ என்னைப் புகவிட்டாலும் உயிர்களிடத்தில் நீ இயல்பாகக் கொண்டுள்ள கருணையால், அந்தப் பிறப்புக்களில் எல்லாம் நீ என் அறிவில் வேறறவிளங்கி, உள்ளத்திலும் எப்பொழுதும் தோன்றி நின்றருள்.

குறிப்பு :

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்"

(திருமுறை -4.94.8) என்ற அருள்மொழியைக் காண்க. அவ்வாறு நிற்பின் அப்பிறப்புத் துன்பம் உடையதாகாது இன்பமேயாம் என்பது கருத்து. உம்மை, எதிர்மறைப் பொருளது. பூண்ட என்பதன் ஈற்று அகரம்

தொகுத்தலாயிற்று. உரு -உடம்பு. இஃது இதன் அகத்துள்ள நெஞ்சத்தைக் குறித்தது.

``நிலாவாத புலால் உடம்பே புகுந்து நின்றகற்பகமே''
(திருமுறை - 6. 95. 4)

``எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்''
(திருவாசகம் - கோயில் திருப் - 10)

என்பனவும் இக்கருத்தே பற்றி வந்தன.

உன்னைவிட நீங்குமுயிர் ஒன்றில்லை ஆதலினால்
என்னைவிட நீங்குவதும் இல்லைநீ - பொன்னைவிடப்
பூந்தேன் அலருடையாய்ப் பொங்குமது ராபுரியில்
வேந்தே பிரியா விடை. (78)

உரை : அழகிய,தேன் பொருந்திய மலர்களே பொன்னாடையைவிடச் சிறந்த ஆடையாய்ப் பொலிந்து சூழ்ந்துள்ள (சோலைகள் சூழ்ந்துள்ள) மதுரை நகரில்வாழும் மன்னனே, சொக்கநாதப் பெருமானே, உன்னைவிட்டுத் தனித்திருக்கத்தக்கனவாய் உன்னை நீங்கிப் போகின்ற உயிர் யாதொன்றும் இல்லை. (அதனால் நானும் உன்னை நீங்கிப் போதல் இயலாது). ஆகவே, நீயும் என்னைவிட்டுத் தனித்து நிற்க நீங்குதல் நிகழாது. இதனால், நீ உயிர்களைப் பிறப்பிற் செல்ல விடும் விடையே உண்மைப் பிரியா விடையாம்.

குறிப்பு : முன்வந்த “விட” இரண்டும் எதிர்காலச் செயவெனெச்சம்.“பொன்னைவிட” என்பது, “பொன்னினும் பார்க்க” என்றவாறு “பொன்னைவிடப் பொங்கும்” என இயையும். “அலர்” என்றது, பொற்றாமரையின் மேலும் நோக்குடையது. “வேந்தே” என்பதன்பின் “உன் விடையே” என்பது வருவிக்க “பிரியா விடை” என்பதை உலகத்தார் பலர் தம்பால்வைத்து வழங்கினாலும் அவையெல்லாம் உபசாரமே என்றபடி. இறைவன் விடை உண்மையான பிரியா விடையாதற்குக் காரணம் முன்னிரண்டடிகளில் விளக்கப்பட்டது. உடலால் பிரியினும் உள்ளத்தால் பிரியாது

விடுக்கும் விடையை உலகத்தார் பிரியா விடை என்றல் அறிக. முன்னை வெண்பாவில் "விட்டாலும்" என்ற விடை பிரியா விடையே யாதலின் அதன்கண் வேண்டிய எனது வேண்டுகோளை நீ முற்றுவித்தருளலாம் என்பது குறிப்பு.

அன்பர்க் கருள்புரிவ தல்லாமல் தேவரீர்
வன்பர்க் கருள்புரிய மாட்டீரேல் - உம்பர்தொழும்
நல்லார் புகழ்மதுரை நாதரே தேவரீர்க்
கெல்லாமும் வல்லசித்த ரேன்? (79)

உரை : தேவர்களால் வணங்கப்படுகின்ற, நல்லோர்களால் புகழப்படுகின்ற மதுரை நகரில் உள்ள இறைவரே! நீர் அன்புள்ளம் உடையவர்க்கு நலம் செய்தலன்றி வன்புள்ளம் உடையவர்க்கு நலம் செய்ய இயலாதவராயின் உமக்கு "எல்லாம் வல்ல சித்தர்" என்ற பெயர் எதற்கு?

குறிப்பு : "எல்லாம்வல்லர்" என்பது செய்யப்படுவன எல்லாவற்றையும் செய்யவல்லவர் என்பதேயல்லது செய்யப்படாதனவற்றையும் செய்பவர் என்பதன்று என்பது கருத்து. "சித்தர்" என்பது அப்பெயர் குறித்தது. "உம்பர்தொழும்" என்பதை ரகர ஒற்று நீக்கி அலகிடுக.

நரகம் இனிநாட நாடோம் உமையாள்
விரகர் தமிழ்மதுரை மேவித் -துரகநரி
ஆக்கினார் வைகையில்நீர் ஆடினோம் அவ்வெல்லைப்
போக்கலாம் யாம்திரிந்திப் போது. (80)

உரை : உமையை ஒரு பாகத்தில் உடைய எல்லாம் வல்லாரது, தமிழ் சிறந்து விளங்குகின்ற மதுரை மாநகரை அடைந்து, நரியைப் பரியாகச் செய்த இறைவரது வைகை நதிக்கரையெங்கும் உலாவி, அந்நதியில் யாம் இப்போது மூழ்கினோம். ஆகையால், யாம் இனி "எமக்கு நரகம் புக வருமோ" என்ற நினைப்பதையும் செய்யமாட்டோம்.

குறிப்பு : "நாடவும்" என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. "உமையாள்" என்பதை "எமையாள்" என ஓதுதல் தகும். "நரி துரகம் ஆக்கினார்" என மாற்றிக் கொள்க. இயற்கையாய் உள்ளது நரியேயாகலின், அதனை ஆக்க வேண்டாமையின்.

நானோ தனுகரணம் நானோ மலமாயை
நானோ இவைகள் நடத்துவது - நானோதான்
பூண்டவினை அறுப்போன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா. (81)

உரை : என்னை ஆட்கொண்டவனே, சொக்கநாதப் பெருமானே, தனுகரணங்கள் நானோ? ஆணவ மாயை (கன்மங்கள்) நானோ? இவைகளைச் செயற்படுத்துபவன் நானோ? புண்ணிய பாவங்களைச் செய்பவனும், வந்து பற்றிக் கொண்ட அவைகளை நீக்குபவனும் நானோ? (இல்லை) எல்லாம் நீயேயாய் இருக்க என்னை ஏன் இப்படித் துன்புறுத்துகின்றாய்?

குறிப்பு : எல்லாம் நீயாகின்ற உண்மையை அறியாமல் எல்லாம் நானாக மயங்கிச் செருக்குகின்ற செருக்கே யான் துன்புறுதற்குக் காரணம் என்பது. தனுகரணங்களும், மலமாயா கன்மங்களும் இறைவன் தானாதல் அவைகள் தம் தம் தன்மையில் நிற்றற்பொருட்டுக் கலக்கும் கலப்பினாலாம். அவைகளை நடத்துவது திரோதான சத்தியால். புண்ணிய பாவம்புரிதல் என்பது அச்சத்தியின்வழி அவற்றைப் புரிவித்தலாம். மல மாயைகளைக் கூறவே கன்மமும் கொள்ளப்படும்.

அரும்பாச நன்மைதின்மை ஆகம் அதன்மேல்
விரும்பாது நிட்டையிலே மேவித் - திரும்பாத
மானந்தா என்னறிவில் மாறாது பொங்கிஎழும்
ஆனந்தா சொக்கநா தா. (82)

உரை : என்னுடைய அறிவின்கண் இடையறாது பொங்கி வருகின்ற இன்ப வடிவானவனே, சொக்கநாதப் பெருமானே, நீங்குதற்கரிய பாசமாகிய ஆணவம், இன்பத் துன்பங்களாகிய இருவினைகள், உடம்பாகிய மாயை ஆகிய மலங்களின் மேல்விருப்பம் செல்லாமல் நிட்டையில் சென்று அதனின்றும் மீளாத பெருமையை அடியேனுக்குத் தந்தருள்.

குறிப்பு : தீமை "தின்மை" என மருவி வழங்குதல் பிற்கால வழக்கு. "அது" என்றது பன்மை ஒருமை மயக்கம். மானம் -பெருமை.

துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தார் இட்டத்தார்
அஞ்சச் சலிக்க அருவருக்கக் – கொஞ்சமுற
வந்த தனுஇருந்து வாழ்ந்துநான் என்னவைத்த
தந்திரமென் சொக்கநா தா. (83)

உரை : சொக்கநாதப் பெருமானே, இறந்தபின் உறவினரும், நண்பரும் முன் இருந்த பெயரை மாற்றி பிணம் என்று வழங்கவும் காணுதற்கும் அஞ்சவும் வெறுப்பும் அருவருப்பும் கொள்ளவுமாகச் சில நாட்களே தனக்குக் கால எல்லையாக வந்துள்ள இந்த உடம்பில் தங்கி வாழ்ந்து, "நான்,நான்"என்று அகங்கரித்து வாழும்படி அடியேனை இதனுள் வைத்திருக்கின்ற உனது உபாயத்தின் வல்லமையை நான் என்னென்பேன்.

குறிப்பு : வல்லமை, மறைக்கும் திறம்; இட்டம் - விருப்பம்; நட்பு இட்டத்தார்-நண்பர். "கிஞ்சித்து" என்னும் வடசொல் "கொஞ்சம்" எனப் பிராகிருதமாய்ச் சிதைந்து வழங்கும். "சிறிது" என்னும் பொருளதாய இஃது இங்குக் காலத்தின்மேல் நின்றது.

தனுவாதி ஆக்கிஉயிர் தன்னிலிசைத் தாட்டி
எனுமாக மம்கருணை என்றுந் - தினமும்நீ
யாச்சரியம் யான்எனதென் றாட்டல்மறந் தொன்றுரைத்தல்
ஆச்சரியம் சொக்கநா தா. (84)

உரை : சொக்கநாதப் பெருமானே, உன்னை, "தனுகரணபுவன போகங்களைப் படைத்து, அவற்றை உயிரோடு சேர்த்து ஆட்டுபவன்" என்று சொல்லுகின்ற ஆகமங்கள், "அதற்குக் காரணம் உயிர்கள்மேல் கருணையே" என்று சொல்லவும், நாங்கள் நாள்தோறும் நீயாகும் வழியில் நடவேமாய் உனது ஆட்டுவிக்கும் செயலை மறந்து, "யான் எனது" என்று வேறு எதையோ சொல்லிக் கொண்டிருத்தல் வியப்பாகின்றது.

குறிப்பு : "ஆட்டி" என்பது பெயர். "என்றும்" என்பதை, "என்னவும்" எனத் திரித்துக் கொள்க. "நீயாச் சரியம் -நீயாக ஒழுக மாட்டோம்" என மூன்றாம் அடிக்குப் பொருள் காண்க. தம்மோடு ஒத்தாரையும் உளப்படுத்துப்பன்மையாகக் கூறினார். இது முற்றெச்சம். யான் என்பது வேறு தொடராதலின், பால்வழுவின்றாம். "ஆட்டல்மறந்து யான் எனது என்று ஒன்று உரைத்தல் ஆச்சரியம்" என்க. "ஒன்று" என்றது. "பொருள்படாத ஒன்று" என்றவாறு. பின்னிரண்டடிகள் "யமகம்" என்னும் சொல்லணிபெற்றன.

தேகாதி எல்லாம் சடம்பிணம்பொய் என்றிருக்க
மோகாதி எல்லாம் முழுந்திருக்க - ஏகமாய்
எப்போதும் இன்பவெள்ளத் தேயிருக்க வாழ்வை என்னுள்
அப்போதே சொக்கநா தா. (85)

உரை : சொக்கநாதப் பெருமானே, உடம்பு முதலிய மாயா காரியங்கள் யாவும் சடம். ஆதலின் அவை பிணத்தோடொப்பன; அழிந்தொழிவன என்று அவற்றை

என்னின் வேறாகக் கண்டிருக்கவும், காமம் முதலிய குற்றங்கள் அற்றிருக்கவும் எப்போதும் பேரின்ப வெள்ளத்திலே ஒன்றாய் இருக்கவும் ஆன அப்பொழுதுதான் நீ என்னுள் வாழ்வாய் போலும் (இப்பொழுது என்னுள் வாழமாட்டாயோ)

குறிப்பு : "இருக்க" என்பன மூன்றும் "இருக்கும் காலம் உளதாக" என அவற்றது காலத்தின்மேல் நின்றன. "வாழ்வை" என்பதன்பின், "போலும்" என்னும் உரையசை எஞ்சி நின்றது.

நின்பாடல் என்று நினைப்பாடல் அன்றியே
என்பாடல் எங்கே இறைவனே - நின்பாடல்
ஆமே தனுவாதி ஆகமநால் வாக்காதி
யாமேநீ சொக்கநா தா. (86)

உரை : முதற் கடவுளே, சொக்கநாதப் பெருமானே உன்னால் பாடப்பட்ட பாடல்களாகிய வேதாகமங்கள் உன்னைத் துதிக்க வல்லன அல்லது என்னால் பாடப்படும் பாடல் எங்ஙனம் உன்னைத் துதிக்க வல்லனவாகும். ஆகா. இனி உனது பாடலாகிய அவ்வேதாகமங்களில் பார்க்குங்கால், எனது உடம்பு முதலியனவும், நூல்களுக்கு ஏதுவாகின்ற நால்வகை வாக்கு முதலியனவும் எல்லாம் நீயேயாகின்றன. (ஆயின், "என் பாடல்" என்று ஒன்று எங்கே உள்ளது)

குறிப்பு : "நின் பாடல், என் பாடல்" என்பன வினை முதற் பொருளாகிய செய்யுட்கிழமைக்கண் வந்த ஆறாம் வேற்றுமைத் தொகைகள். முதலடியின் ஈற்றில், "அதற்கு" என்பதும், எங்கே என்பதன்பின் 'உள்ளன' என்பதும் எஞ்சி நின்றன. "எங்கே உள்ளன" என்பது சேய்மைக் கண்ணவாய் இயைபின்றி நிற்றலைக் குறிக்கும். பின்வந்த "நின்பாடல்" என்பதில், "நின்பாடற்கண்" என ஏழாவது விரிக்க. "நீ" என்பதை முன்னுங்கூட்டி, "தனுவாதி நீயாம்; ஆகம நால்

வாக்காதி நீயாம்'' என இயைத்துப் பொருள் கொள்க. "ஆகமம்'' இங்கு "நூல்'' என்னும் பொருட்டு, ஏகாரங்கள் தேற்றப் பொருளன.

நீயியற்ற ஓர்பொருளை நிச்சயித்த நாயேனும்
போயியற்றல் செய்யப் புரிகுவேன்-நீயியற்றல்
ஆக்கா தணுவும் அசையுமோ அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா. (87)

உரை : உலக விகாரங்களால் சிறிதும் தாக்குண்ணாது நிற்கும் சொக்கநாதப் பெருமானே, நீ அசைக்காமல் ஓர் அணுத்தானும் அசையுமோ? அசையாது ஆதலின், நீ செய்ய நினைத்த செயலையே நானும் தலைப்பட்டுச் செய்ய விரும்புவேனாகின்றேன் (ஆகையால், எனக்கெனச் செயல் ஏது)

குறிப்பு : செயலையும், "பொருள்'' என்றல் தருக்க நூல் வழக்கு. "நிச்சயித்த ஓர் பொருளை'' என மாற்றிக் கொள்க.

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்(கு)
என்றுநீ நன்மைசெய்வ தன்றிநான் – ஒன்றேனும்
செய்யுமா றெங்ஙன் சிவனே இனிநாயேன்
உய்யுமாறு எங்ஙன் உரை. (88)

உரை : சிவபெருமானே, சொக்கநாதனே, அநாதி காலந்தொட்டு, இன்று வரையிலும், இனிமேலும் எனக்கு நீ நன்மை செய்வதன்றி, ஒரு நாளாயினும் உனக்கு நான் நன்மைசெய்தல் எவ்வாறுகூடும்! கூடாதபொழுதுநாயேன் குற்றத்துட்படாது எங்ஙனம் உய்தல் கூடும்!

குறிப்பு : "உனது நன்றியை ஒருபோதும் மறவா திருத்தலே உனக்கு நான் செய்யும் நன்றியாகும்; அதனைச் செய்வேனாயின் உய்வேன்'' என்பது கருத்து.

அறிவுபர மானந்த மாகவில்லை ஆகம்
பொறிகரணம்யானெனதும்போக - நெறிதவஞ்சேர்
பேரன்போ இல்லை பினைநான் உனக்கடிமைக்(கு)
ஆர்என்பேன் சொக்கநா தா. (89)

உரை : சொக்கநாதப் பெருமானே, எனது அறிவு பேரின்பமாய் மாறவில்லை உடம்பு, ஐம்பொறி அந்தக் காரணம், யான் என்றல், எனது என்றல் இவையெல்லாம் அற்றொழிய முறையான தவத்தைப் பொருந்துதலில் மிக்க விருப்பம் இல்லை. "அங்ஙனம் ஆனபொழுது நான் உனக்கு அடியவன் ஆதற்கு என்ன உரிமை யுடையேன்" என்று எண்ணித்தான் வருந்துகின்றேன்.

குறிப்பு : "நெறித்தவம்" என்னும் தகர ஒற்று, தொகுத்தலாயிற்று. அன்பு, இங்கு, விருப்பம். "என்பேன்" என்பது வருந்துதலாகிய தன்காரியம் தோற்றி நின்றது.

நின்னளவி லானந்தம் நின்கருணை சற்றேனும்
என்னளவில் தோற்றா திருந்தக்கால் - நின்னளவில்
பூரணம்பொய் ஆனந்தம் பொய்கருணை பொய்உரைத்த
ஆரணம்பொய் சொக்கநா தா. (90)

உரை : சொக்கநாதப் பெருமானே, உனது எல்லையில்லாத இன்பமும், அருளும் என்னிடததில் சிறிதும்புலனாகாமலே இருந்தால் என்னைப் பொருத்தமட்டில் அவையும், பிறவுமெல்லாம் பொய்தாமே?

குறிப்பு : "ஆதலால் அவை அனைத்தும் மெய்யாகும்படி எனக்கு அனுபவமாகச் செய்" என்பது குறிப்பெச்சம். உரைத்தலுக்கு, "அவைகளை" என்னும் செயப்படுபொருள் வருவித்துக் கொள்க.

தேவே மதுரைநகர்ச் சிற்பரனே எவ்வுயிர்க்கும்
கோவே எனையாளும் கோவேஎன் - நாவே
உனைத்துதிக்கச் சிந்தை உனைநினைக்கச் சென்னி
கனத்தில் உனைவணங்கக் காண். (91)

உரை : கடவுளே, மதுரை நகரில் வாழும் அறிவு வடிவமான மேலோனே, எல்லா உயிர்கட்கும் தலைவனே, அடியேனை ஆண்டருளும் முதல்வனே, எனது நா உன்னையே துதிக்கவும், எனது மனம் உன்னையே நினைக்கவும், எனது தலை பயனுடையதாய் உன்னையே வணங்கவும் உனது திருநோக்கினைச் செய்தருள்.

குறிப்பு : ஏகாரத்தைப் பிரித்து "உன்னை" என்பவற்றோடெல்லாம் கூட்டுக. பயனை, "கனம்" என்றார். "எண்குணத்தான் தாளை வணங்காத தலை" பயனிலதாதல் (திருக்குறள் 9) அறிக, அவன் நோக்கிய மாத்திரையே செயல் நிகழுமாதலின், "காண்" என்றார்.

உன்னைச்சிங் காரித் துனதழகு பாராமல்
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன் - பொன்னை
அரிவையரை யேநினையும் அன்பிலேற் குன்தாள்
தருவையோ சொக்கநா தா. (92)

உரை : (இதன் பொருள் எளிதில் விளங்குவதாம்)

குறிப்பு : பொன்னாசை பெண்ணாசைகளைக் கூறவே மண்ணாசையும் உடன் கொள்ளப்படும். "இவற்றில் ஆசை உளதேயன்றி, உன்மேல் அன்பு உண்டாகவில்லை" என்பது கருத்து. "தருவையோ என்றது" தரப்படுவதற்கு உரியனல்லேனாயினும், தந்தருளல் வேண்டும் என்னும் குறிப்பினது.

சொக்கநா தாஉனையே சொல்லுமடி யேனுடைய
பக்கமாய் நின்றுவினை பாற்றியே - எக்காலும்
மீண்டுவா ராதகதி மேவுவிப்பாய் தென்மதுரைத்
தாண்டவனே சொக்கநா தா. (93)

உரை : தென்னாட்டில் உள்ள மதுரையில் நடம்புரிபவனே, சொக்கநாதப் பெருமானே, "சொக்கநாதா, சொக்கநாதா" என்று உன் பெயரையே எப்பொழுதும் சொல்லுகின்ற அடியேனுடைய அருகிலே நீ நின்று எனது வினைகளை அழித்து, இனி ஒருபோதும் இவ்வுலகில் மீண்டுவாராத அந்நிலையை யான் அடையச் செய்வாய்.

குறிப்பு : முதற்கண் நின்ற "சொக்கநாதா" என்பதன் பின் "என்று" என்பது எஞ்சி நின்றது.

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை -வேறெனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேநின் தாளே துணை. (94)

சொக்கநாத வெண்பா முற்றிற்று.

உரை: சிவபெருமானே, பழிக்கு அஞ்சினவனாகிய சொக்கநாதனே, அடியேனுக்கு இயல்பாக அமைதி இல்லை. என்னிடத்தில் அன்பு உண்டாகி, அதன்வழி எனக்குத் தேறுதல் உண்டாக்கும் சொற்களைச் சொல்லுபவரும் சிலர் இல்லை. ஒருகாலத்திலும் எனக்கு ஆதரவு ஆவாரும் இல்லை. ஆகையால் உனது திருவடியே எனக்குத் துணை.

குறிப்பு : "தல்" என்பதுபோல "தலை" என்பதும் தொழிற் பெயர் விகுதியாம். அன்றி, "ஐ சாரியை" எனினுமாம். இரண்டாம் அடி ஒருஉ எதுகை பெறாமையால்,

இதனை "இன்னிசைவெண்பா" என்க. இறைவன் பழிக்கு அஞ்சியதைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க. வேந்தனை "வேந்து" என்றல்போல, சொக்கனை, "சொக்கு" என்றார். சொக்கு - அழகு.

சொக்கநாத வெண்பா உரை முற்றிற்று.



உ

சிவமயம்

# தனிப்பாடல்கள்

## சொக்கநாத வெண்பாவின்

### சில பிரதிகளில் காணப்படுவன

புண்டரிகத் தாளைப் புகழ்ந்து புகழ்ந்துதினம்
அண்டமரர் கொண்டிறைஞ்சும் ஆதியே - தொண்டுபடும்
நாயேனை ஆண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயேநீ சொக்கநா தா. (1)

மிண்டுசெய்யும் மும்மலமும் மிக்கவினை நல்குரவும்
பண்டுபோ லென்னைவந்து பற்றாமல் - கொண்டு போய்
நின்னருளில் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே சொக்கநா தா. (2)

கூரியவெம் பாசக் குளிர்நீங்க நின்னருளாம்
சூரியன்எப் போதுவந்து தோன்றுமோ - பாரறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர் கொள்ளையிட்ட மாமதுரை
இட்டமிட்ட சொக்கநா தா. (3)

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா - மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா. (4)

சன்மார்க்கம் செய்யும் தபோதனரோ டென்னையுநீ
நன்மார்க்கம் செய்யவருள் நாடுமோ - துன்மார்க்கம்
செய்கின்ற முப்புரத்தைத் தீயாக்கித் தென்மதுரை
வைகுகின்ற சொக்கநா தா. (5)

வந்த பொருளாசை மண்ணாசை பெண்ணாசை
இந்தவகை யாசையெல்லாம் என் மனத்தின் வந்துமினி
நேராமல் வாழ நினைகண்டாய் தென்கூடல்
பேராத சொக்கநா தா. (6)

தண்டுவரும் குண்டுவரும் தானைவரும் ஆனைவரும்
வண்டில்வரும் ஆடுவரும் மாடுவரும் - மிண்டிப்
பெருங்கோட்டை யும்சுமையும் பின்புவருங்கூடல்
அருங்கோட்டை வாசலிற்சென் றால். (7)



உ

குருபாதம்

## தருமை ஆதீனக் குருமுதல்வர்
## ஸ்ரீ குருஞானசம்பந்தர்
## அருளிய
# சிவபோக சாரம்

### ஆசிரியர் வாழ்த்து

சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன் - முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாச னுண்மை
தருநாத னங்குருநா தன். (1)

*பொழிப்புரை:-* அழகிய திருவாரூரைத் தமக்கு இடமாகக் கொண்டிருப்பவரும், எல்லாரினும் மேம்பட்ட தலைவராயினவரும், நமக்குக் குருநாதருமாகிய ஞானப்பிரகாசரென்னும் அருளாசிரியர் சித்தியும், பத்தியும் உண்மை ஞானமும் முக்தியுமாகிய பயன்களையெல்லாம் அருளவல்ல முதல்வராவர்.

அருவு முருவு மருவுருவு மல்லா
வொருவ னுயிர்க்குயிரா யோங்கித் - திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
யமலபதந் தந்தெனையாண் டான். (2)

*(பொ-ரை)* அருவமும் உருவமும் அருவுருவமும் என்னும் முக்கூற்றினுள் ஒரு கூற்றினும்படாது தன்னை யொப்பாரின்மையிற் றானேயாய முதல்வன், முன்னெல்லாம் என்னுயிர்க் குயிராய் என் உண்ணின்று உணர்த்திவந்து, இதுபொழுது திருவாரூரின்கணுள்ள ஞானப்பிரகாசன் என்னும் ஆசான் மூர்த்தியாக எழுந்தருளிவந்து ஞான உருவமாகத் தனது திருவடிகளை

எனக்கு நிழலாகத்தந்து ஆட்கொண்டருளினான்.

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்க ளன்பனைத்தும் - பாரெவர்க்குங்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்பிர காசனெனு
மத்தனென்போல் வந்திலனா னால். (3)

(பொ-ரை) யாவர்க்குந் தலைவராய், இந்நிலவுலகில் திருவாரூரின் கணெழுந்தருளியுள்ள ஞானப்பிரகாசரென்னும் அருட்குரவர், இவ்வாறு மனித்தவுருக்கொண்டு வந்தருள் செய்திலராயின், அறநெறியாகிய உலகியலொழுக்கமும், சிவதன்ம சிவயோக சிவஞானங்களாகிய மெய்ந்நெறியொழுக்கம் என்னும் சாதனங்களும், அவற்றது பயனாகிய சித்தி முத்தியென்னும் பேறுகளும் இன்னவென்பதனை யானெங்ஙன முணரவல்லேன்.

அரியயற்கு முன்னா ளடிமுடியுங் காணாப்
பெரியவனே வந்து பிறந்து - துரியம்
பெருக்குகின்றான் ஞானப் பிரகாச னாகி
யிருக்கின்றா னாரூரி லின்று. (4)

(பொ-ரை) முன்னைநாளில் பிரம விட்டுணுக்களால் அடியுமுடியு மறியவொண்ணாத பெரியோன் தானே இன்று இந்நிலவுலகில் தோன்றி ஞானப்பிரகாச னென்னும் அருட் குரவனாய்த் திருவாரூரின்கண் இருக்கின்றான்; இருந்து ஞானாநுபூதியினை மிகுவிக்கின்றான்.

கண்டேனிப் பாசங் கழிந்தே னமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன் - வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான். (5)

(பொ-ரை) வண்டுக ளொலிப்பச் சோலைகள் அவற்றிற்குத்தேனைச் சொரியும் திருவாரூரின்கண் எழுந்தருளியுள்ள ஞானப்பிரகாசரென்னும் அருட்குர வரையே நான் எனக்கு ஆசான் மூர்த்திகளாக அறிந்து பற்றினேன். பாசக்கூட்டங்கள் நீங்கப்பெற்றுத் திருவருளாகிய அமுதத்தை முகந்து பருகினேன்; அதனாற் பேரின்பத்தில் மூழ்கினேன்.

உள்ளிருந்தே யென்று முணர்த்துகினும் கண்டிலரென்
றுள்ளும் புறம்புமா வோமென்று - மெள்ள
நரருருவா யாரூரின் வந்தா னமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். (6)

(பொ-ரை) நம்மை யாளாகக் கொண்டு திருவருளைத் தந்த ஞானப்பிரகாச குரவர், நாம் எஞ்ஞான்றும் உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்தி வரவும், அங்ஙனம் உணர்த்துமாற்றை இவர் உணர்ந்திலராகலான் இன்று அகத்தேயன்றிப் புறத்தும் வெளிநின்றுணர்த்துதும் எனக் கருதி, நம்மனோருள் ஒருவர்போல மென்மையாக மனித்தவுருக்கொண்டு திருவாரூரின்கண் வந்தருளினார்.

இருளுதய நீக்கு மிரவியைப்போ லென்னு
ளருளுதய நன்றா யருளி - மருளுதய
மாற்றியவ னாரூரன் மாமறையு மாகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். (7)

(பொ-ரை) ஒளித்தோற்றத்தினைத் தந்து இருள்தோற்றத்தினைப் போக்கும் ஞாயிற்றைப்போல எனதுள்ளத்தே அருள்தோற்றத்தினைக் குறைவறக் கொடுத்து மருள்தோற்றத்தினைத் துடைத்தருளியவர் திருவாரூரின்கணெழுந்தருளியிருப்பவரும் பெரிய வேதாகமங்களை ஐயமறவுணத்தியவருமாகிய ஞானப்பிரகாச குரவர்.

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே - அழியாத
பூரணா! செங்கமலப் பொற்பாதா! தென்கமலை
ஆரணா! நாயேற் கருள். (8)

*(பொ-ரை) அழிவின்மையும் வியாபகமும் உடையீர்! செந்தாமரை மலர்போலும் அழகிய திருவடியினீர்! திருவாரூரின்க ணெழுந்தருளியுள்ள மறைமுதல்வரீர்! நீங்காத பேரின்பத்துளடங்கி உலகின் மீளாது அவ்வின்பமேயாய்விடும்படி அடியேனுக் கருள்செய்யீர்.*

தேடுந் திரவியமுஞ் சிற்றறிவும் பற்றுதலும்
கூடும்பொய் என்றருளிற் கூட்டினான் - நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். (9)

*(பொ-ரை) திருவாரூரின்க ணெழுந்தருளியுள்ள முதல்வராய அளத்தற்கரிய பெருமையுடைய ஞானப்பிரகாசரென்னும் அருட்குரவர், இவ்வுலகில் ஈட்டப்படும் செல்வமும் யாக்கையும், அவற்றைப் பொருளென்றறியும் புல்லறிவும், அவற்றின்கண் செய்யும் பற்றும் பொய்யெனவும், முதல்வன் திருவரு ளொன்றுமே மெய்யெனவுங்காட்டி அவற்றினின்று நீக்கித் திருவருளிற் சேர்ப்பித்தார்,*

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய் - மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னிஎன்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். (10)

*(பொ-ரை) இந்திரியவாயிலாய்க் காண்டல், கேட்டல்,பூணல்,தரித்தல் முதலிய இன்ப நுகர்ச்சிக ளெல்லாம் பொய்யாக, மாட்சியோடும் இன்பவெள்ளப்*

பெருக்காய் என்னுள் புரையறச் சிறந்து திருஞானசம்பந்தன் வீற்றிருப்பதொன்றுமே உண்மையாய் முடிந்தது; எல்லாம் பரமாய்த் தோன்ற விகற்பங்களனைத்தும் பொய்யென மறைய ஞானசம்பந்தமே நித்தியமாய் நின்றது. மேற் பாடலில் அருளிற் கூட்டவே இவ்வாறு தெளியப்பட்டது.

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கிஎன்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை - பெருமைஇடும்
பாங்காரங் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. (11)

(பொ-ரை) தற்பெருமை பாராட்டலும், பிறரை எள்ளியுரைத்தலும்,யானென்னுஞ் செருக்கும், வெகுளியும் என தென்னும் பற்றும், பொருள்கள் மேற் செல்லும் அவாவும், நல்லனவுந் தீயனவுமாகச் செய்யும் வினைகளும் என்னும் இம்மலகாரியங்கள் நீங்காத பொழுது முதல்வன் திருவருள் கைவரப்பெற்று அவனோடு ஒன்றாய் நின்று இன்பத்தழுந்தல் என்பது பெரிதும் அரிது.

தன்பெருமை யெண்ணாமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை - தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியு நாள். (12)

(பொ-ரை) தனது பெருமையைத் தான் எண்ணாத பணிவும், தன் முனைப்பாகிய சீவபோதம் நீங்குதலும், மின்னுப்போலக் கடிதிற் றோன்றி மாய்தலையே பெருமையாகவுடைய உலகத்தினது நிலையாமை நோக்கி அதனை விரும்பாமையும், தன்னிடத்துள்ள வுடம்பை அதன்புன்மை நோக்கி எஞ்ஞான்றும் அருவருத் தொழுகுதலும், பெரும் பொருளாகிய சிவத்தில் மனம் பதிதலுமாகிய இவை தோன்றுங்காலமே துன்பத்தை தரும் பிறவி நீங்குங்காலம்.

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய். (13)

(பொ-ரை) சொல்லிறந்தவழியும், நினைவிறந்தவழியும், கருவி கரணங்களாகிய மறைப்பு இறந்தவழியுமே காணற் பாலனாய அம்முதல்வனை, அவையில்லாதார் ஏட்டின் கணெழுதியவற்றைப் பெரிதும் ஓதுதலும், தோத்திரங்கள் செய்தலும், பூசனைகள் செய்தலும் போலியேயாம்,

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக் - குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணாப் பொருள். (14)

(பொ-ரை)ஆசிரிய னருளொன்றே முதற் பொருளைக் காண்டற்குவாயிலாமெனத் தெருட்டினுந் தெருளமாட்டாத மடமைவாய்ந்த மனத் தினையுடையோனே! உரையின் மேம்பட்ட உணர்வும் அறிந்திலாத பெரிய மறை பொருளாகிய அம் முதற்பொருளை அல்லும் பகலும் காலவரைவின்றிக் குரல் கேடுறுமாறு பாழ்த்தவாயினாற் கூப்பீடு செய்யுமதனாற் காணவருமோ? மாயோன் நிலத்தைப் பிளந்து தேடியுங் காணவாராத பொருள் அதுவாகலான்.

ஒருகோடி ஆகமங்க ளெல்லாம் உணர்ந்தும்
பெருகுதவஞ் சித்தியெல்லாம் பெற்றும் - குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம், (15)

(பொ-ரை) அளவிறந்த ஆகமங்கள் முழுவதும் உணர்ந்தும் மிக்க தவத்தினையும் அதனான் அணிமாதி

அட்டசித்திகளையும் பெற்றும், அருட்குரவனருளைப் பெற்று அவனுணர்த்தியவாற்றினிற்கப் பெறாதார்க்கு அவற்றால் பயனொன்று மின்றி எஞ்ஞான்றும் உளதாவது மனக் கலக்கமேயாம்.

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய் - இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. (16)

(பொ - ரை)இறைவன் மாட்டு முறுகியெழும் அன்பும் அவ்வன்புடனே பிறப்பு வீடுகளின் துன்ப இன்பக் கூறு பாட்டுணர்வும், அவ்வுணர்வினால் பிறவித்துன்பத்திற் கேதுவாய வினையை நீக்கிக்கோடற் குரிய முயற்சியும், அதனாற் பேரின்பத்தைத்தரும் பரிபூரண நிலையை அடைதற்கண்ணே வேட்கையும் உடையராய் விரையவந்தடையும் தீவிர நிலையுடையார்க்கே அருளாசிரியன் உண்மை ஞானத்தை உணர்த்துதல் உளதாகும்.

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே - மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம். (17)

(பொ - ரை) பிரகிருதிமாயா காரியங்களாகிய தூலரூப தத்துவங்களையும் அசுத்தமாயா காரியங்களாகிய சூக்குமரூப தத்துவங்களையும், சுத்த மாயா காரியங்களாகிய பரரூபதத்துவங்களையும் நால்வகை வாக்குக்களாய சத்தப் பிரபஞ்சங்களையும் அவற்றின் வேறாய் அவற்றிற்கு வியாபகமாகிய உயிரினையும், அவ்வுயிரை மறைத்து நிற்கும் மலத்தினையும் இன்பப் பொருளாக வுணர்ந்து, மயக்கத்தினைச் செய்யும் அம்மாயா காரியங்கள் சடமாதலில் தன்னின் வேறென்றறிந்து, நீங்கி அறிவு வடிவமாகத்

தற்சொரூபத்தை யறிந்த தன்னை எவ்விடத்தும் விட்டு நீங்காது பொருந்திய பொருள்தானே இன்பப் பொருளென்று உணரற்பாற்று.

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி இன்ப சுகமாய்ச் - சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தையகன்
றானந்த மாதியிலா தான். (18)

(பொ - ரை) மனமுதலிய கருவிகளைத் தன்னின் வேறாய சடமென்றறிந்த அறிவே தானாகி, அதனால் சுட்டுணர்வு நீங்கப் பெற்றுப் பின் வியாபாகமாயறியும் முதல்வனறிவினைத் தலைப்பட்டுப் பின் அவ்வறிவின்கட்டோன்றும், சுகப்பிரபையைப் பெற்றுப் பின் அதற்கு மேலாய சிவப்பேற்றின்கண் தோன்றும் பரமானந்த வெள்ளத்தினைக் கூடிப் பின் அதன் கண் தன்னை மறந்து அழுந்தினவனே முடிவுமுதலும் அறியவாராத பரிபூரண இன்பத்தை எய்தினோனாவன்.

இந்தனத்தி னங்கி எரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் - சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை. (19)

(பொ - ரை) முத்தியிடத்துப்பாசம் இல்லையாக ஆன்மாவுஞ் சிவனுமேயாய் நிற்கின்ற முறைமை, விறகுந் தீயும், வெந்நீருஞ் சூடும், தேனுந் தித்திப்பும், மலரும் மணமும், ஆகாயமுங் காற்றும், கண்ணுங் கதிரொளியும் எஞ்ஞான்றும் வேறற நிற்றல்போல்வதாம்.

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
வேறாக நின்றஇடஞ் சொல்லின் - மாறா
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகாண் நீயே புணர். (20)

(பொ - ரை) முப்பத்தாறு தத்துவங்களையும், ஆணவ மலத்தையும் நீங்கி ஆன்மா தனியாக நின்ற இடத்தினை இன்னதெனச் சொல்லுமிடத்து, அது எவ்விடத்தும் நிறைந்து நின்ற வியாபகப் பொருளாகிய சிவமேயாம். அதனை நீங்குதலில்லாத வெறும் பாழ் என்று கருதுங் கருத்தினை விட்டுக் கருவிகளோடுங் கூடாது நீ மாத்திரமே சென்று பற்று வாயாக.

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்திற் கண்டு - நனவாதி
தோற்றிடும்போ தந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவர் என்றும் மலம். (21)

(பொ - ரை) சுத்த சாக்கிர முதலியனவாகக் கூறப்படும் சுத்தாவத்தைகள் ஐந்தன் இறுதிக்கண்ணதாகிய அதீதத்தின் அனுபவிக்கப்படுவதாகிய பேரின்ப அனுபவத்தினைக் கனவு முதலாகக் கீழ்நோக்கியிறங்கும் கேவலாவத்தைகளின் இறுதிக்கண்ணதாகிய அதீதத்தின் அனுபவிக்கப்படும் அனுபவத்தின் இயற்பிற்றாக அறிந்து, அச்சுத்த சாக்கிர முதலிய சுத்தாவத்தைகள் தோன்றுங்காலத்து அப்பேரின்பத்தினை அனுபவமாக உணர்ந்தவரே எஞ்ஞான்றும் மலத்தை நீக்கினவராவர்.

தத்துவங்கள் எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்கள் ஏதென்னின் சாற்றக்கேள் - மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்தில் தோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே (22)

(பொ - ரை) தத்துவங்களையும் தனித்தனி ஆராய்ந்திடர்ப்படுதல் வேண்டா; தத்துவங்களாவன யாவையென அவற்றதுண்மையை ஆராய்ந்து சொல்லப்புகின் ஒருகாலைக்கொருகால் மிகும் பேரின்பத் தோற்றத்திற் கேதுவாகிய சிவத்திலழுந்தாமைக் கேதுவாய் முன்னிற்கும் மாயாகாரியங்கள்தாமே தத்துவங்களாம்.

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் - பேறாக
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும். (23)

(பொ - ரை) ஆணவம் கன்மம் மாயை என்னும் மும் மலங்களுங்கெட்டொழிய முத்திநிலை யொன்றையே பயனாகக் கருதிநிற்குந் தீவிரவுணர்வுடையார்க்குப் பாச நீக்கமும் வீடுபேறுமாகிய அவ்விருவகைப் பயனுங் கைகூடுதற் பொருட்டு இவ்வுலகின்கண் பல விரிந்துகிடக்கும் நூல்களையெல்லாம் பார்த்தறிவதினும் சிவஞான சித்தியின்கண் ஒரு திருவிருத்தத்தின் பாதியைப் பார்த்தாலே அமையும்.

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்தே - திரமாக
நில்லென்றான் கண்டஎல்லாம் நேதிபண்ணி மும்மலமுங்
கொல்லென்றான் ஞான குரு. (24)

(பொ-ரை) எமது ஞானகுரவர் “ மனமுதலிய கருவிகள் வியாபரித்துச் சென்று அணுகவொண்ணாத சிவத்தை அடைதற்கு மல மாயா காரியங்களாகிய கேவல சகலங்கள் நீங்கிய நிலையின்கண்ணே ஒருபொழுதும் நீங்காது நிலையாக நில்” என்றும், “ அவ்வாறு நிற்புழி மல மாயா கன்மங்களின் சேட்டிப்புத் தோன்ற வருமாயின் எமது அருளுரை பற்றுக்கோடாக அவற்றை இவை பொருளல்லவெனக் கழிக்கு மாற்றாற் பற்றறக்களை” யென்றும் அருளிச்செய்தார்.

காயம் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயஇருள் மாயை அதுஎன்றால் - தூயபொருட்
போதனே! செங்கமலப் பொற்பாதனே! எனைநீ
ஏதென்று சொல்லாய் இனி. (25)

(பொ-ரை) மெய்ப்பொருளைப் போதிப்பீர்! செந்தாமரை மலர்போலும் அழகிய திருவடிகளை யுடையீர்! இத்தனு கரண புவன போகங்களாகிய நான்கும் நானாகாது ஆணவமலங் காரணமாகவந்த மாயா காரியங்களாயின், பின்னை என்னை இன்ன பொருளென்று தேவரீர் சொல்லியருளுவீராக.

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும் - என்னைஉன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். (26)

(பொ-ரை) மேற்கூறியவாறு வினாய எனக்குத் தனு கரண முதலியவற்றையானல்லவென்று கழித்தும், இனியான் யாதாகற் பாலேனெனத் தேடியும் நின்ற அறிவுதானே யானென்றும், அவ்வறிவின் கண்ணே வறியார்க்குக் கிழியீடு நேர்பட்டாற்போல இதுகாறுங் கண்டறியாததாய்த் தோன்றும் ஓர் இன்ப உணர்வுதானே சிவமெனவும், இவ்வாறு எனது உண்மைநிலையை உற்றுநோக்காதவாறு என் அறிவை எப்பொழுதும்மறைத்து நின்றதுதானே பாசமெனவுங் கூறியருளினார் எம் அருட்குரவர். யானெனப்பட்ட பசுவும், சிவமெனப்பட்ட பதியும், பாசமுமாகிய இம்முப்பொருளியல்பை ஆராய்ந்து, ஐயந்திரிபற உணர்ந்தவரே பாசவிடுதியைப் பெறுவர்.

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம் - பொங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார். (27)

(பொ-ரை) நீ எவ்விடத்தும் நிறைந்துநின்று அறிதற்குரிய வியாபகசித்து; நாம் நீ அறியுமிடத்தெல்லாம் உன் அறிவுக்கறிவாயிருந்து அறியச்செய்யும் அதிவியாபக

சித்து; மிகுந்த ஆணவம் உனது வியாபகத்தன்மையை மறைத்து அணுத்தன்மையைச் செய்வது; மாயை அவ்வாணவ மறைப்பைச் சிறிதே நீக்கி உன்னறிவை உடம்பளவிற்றாக விளக்கி உடம்பு முதலியவற்றை நீயேயாகக் காட்டி மயக்குவது; கன்மமலம் அவ்வுடம்பு முதலியவற்றான் ஒன்றையொன்றொவ்வாத பலதிறப்பட்ட நன்மை தீமைகளைப் பயந்து நிற்பது; முப்பொருள்களின் இயல்பை இவ்வாறறிவாயாக.

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லவங்கள்
நங்கமலை வாழ்கிளியே!நாடிக்கேள் – சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதின் தத்துவத்தைக் காட்டிஅருள்
தத்துவத்தைக் காட்டியது தான். (28)

*(பொ-ரை)* நம் திருவாரூரின்கண் மனம் வைத்த மாணவனே! உற்றுக்கேட்பாயாக; மும்மலங் களினியல்பையும், அவற்றோடு பொருந்தி நிற்கும் உயிர்களதியல்பினையும்,அவ்வுயிர்க்குயிராகிய சிவத்தினது உண்மையினையும் எனக்கு ஐயமறத் தெளிவித்தது எமது அருட் குரவரது செவ்விவாய்ந்த திருவடிகளேயாம்.

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன் – பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகைஅருளைக்
காட்டினான் கூட்டினான் காண். (29)

*(பொ-ரை)* மணி முதலியவற்றின் ஒளிகள் மிகுந்த திருவாரூரின்கண் எழுந்தருளியுள்ள செந்தாமரை மலர் போலும் திருவடிகளை யுடையவரும், தமிழ்மொழியானே திருவாய்மலர்ந்தருளிகின்றவருமாகிய ஞானப் பிரகாச ரென்னும் எமது அருட்குரவர் முன்னர்ப் பாசங்களை யறுத்துப் பின்னர்யான் அப்பாசங்களில் திரும்பாதவாறு திருவாருளாலே தெளிவித்துப், பின் அத்திருவருள்

வாயிலாகச் சிவத்தையடையச் செய்தார்.

நானிங்காய் நீயங்காய் நாட்டமற வைத்ததற்பின்
நானெங்கே நீயெங்கே நாதனே!-வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ உன்னறிவில்
நன்றாகத் தோன்றுசுகம் நாம். (30)

(பொ-ரை) எமது முதல்வரே! எனது தன்மை அது வாயினும் யான் மாயா காரியங்களிடத்தும் நீர் மாயையைக் கடந்தவிடத்துமாக இயைபில்லாதவாறு அடியேனை வைத்தமையின், யான் என்னையுந் தேவரீரையும் உணரும் வலியிலேனாயினேன். இனி உணருமாறென்னை? இது வினா. நீ அம்மாயா காரியங்களல்லை; ஆகாயம்போல எவ்விடத்தும் நிறைந்து நின்ற அறிவேயெனவும், யாம் நின்னின் வேறல்லேம் அவ்வறிவில் நன்கு விளங்கும் இன்பமே யெனவும் மேற்கூறிய அவ்வியல்பினை மாயா காரியங்களான் மறவாது தெளிந்து நிற்றலே உணரு முறைமையாம். இது விடை.

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே
நிலைபெற் றிருந்தசுக ஞேயம் - மலைவற்
றிருந்ததுகண் டாயே இருந்தபடி அத்தோ
டிருந்துவிடெப் போதும் இனி. (31)

(பொ-ரை) தத்துவங்களில் சென்றலையாது அவற்றினீங்கி நின்ற அறிவாகிய நீ அங்ஙனம் நீங்கிநின்ற நிலைக்கண், நின்றுழி நில்லாதுதிரியும் அத்தத்துவங்கள் போலன்றி நிலைபெற்றுத் தோன்றுகின்ற இன்ப வடிவினதாகிய ஞேயப்பொருள் தெளிவுபடத் தோன்றுதலைக் கண்டாயன்றே! இனி அஞ்ஞேயப் பொருளிருந்தவாறு அதனோடே எப்போதும் நீங்காதிருந்துவிடு.

அகத்தை இழந்தருளாய் அவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான் - மகத்தான
சிற்பரனா ரூர்தனில்வாழ் செங்கமலப் பொற்பாத
தற்பரஞா னப்பிரகா சன். (32)

*(பொ-ரை) நானென்பதனை யிழந்து, அருளேதானாய்ப் பின் அவ்விடத்துத் தோன்றுகின்ற சுகத்தில் அழுந்தி, அதனால் பாசக் கூட்டங்களை விடுக என்று அருளிச் செய்தார், பேரறிவினராய்த் திருவாரூரின்கண் எழுந்தருளியுள்ள செந்தாமரை மலர்போலும் திருவடிகளையுடைய, உயிர்கட்குத் தலைவராகிய ஞானப்பிரகாசரென்னும் எமது அருட்குரவர்.*

கிட்டாத ஈசனுனைக் கிட்டி அருள்புரிந்த
நிட்டானு பூதி நிலையிலே-முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வரும்இன்ப பூரணமா வை. (33)

*(பொ-ரை) கிடைத்தற்கரிய முதல்வன் தானே தனது கருணையால் உன்பால் வந்து உனக்கு அருள்செய்த நிட்டையாகிய அநுபவ நிலையிற்றானே வழுவாது நில்; அங்ஙனம் நிற்கவே நெருப்பையணைந்ததனால் மாற்றொளி மிகப்பெற்ற பொன்போல் ஒருகாலைக் கொருகால்மிகும் பேரின்பநிறைவினையுடையையாகுவை.*

அநாதி சுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா - அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு. (34)

*(பொ-ரை) அநாதியே இன்பவடிவினனாய முதல்வனது திருவடி வியாபகத்துள் நின்று என்றும் அநாதியாய இன்ப வடிவினதாதற்குரித்து ஆன்மா;*

அற்றாயினும், அநாதியே அதற்குத் தடையாய் இருந்தது ஆணவமலமாகலின் அதனை அவனது திருவருளினாற் போக்கி இனி நீ அத்திருவருள் கண்ணாக ஞேயத்தைக் கண்டபடியேமாறாது கண்டுகொண்டு இருப்பாயாக.

இற்றை வரைக்கர ணத்தோ டிணங்கினையே
இற்றைவரைச் சென்மம் எடுத்தனையே - இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யீதறநல்
இன்பவெள்ளத் துள்ளே இரு. (35)

(பொ-ரை) படைப்புக்காலந் தொட்டு இதுகாறுங் கருவி கரணங்களிற் றொடக்குண்டு பிறவியிற்பட்டுப் பெருந்துன்பத்திற் பட்டாயன்றே; இனி அத்துன்பமெல்லா நீங்கப் பேரின்பவெள்ளத்துள் திளைத்திருப்பாயாக.

தேகாதி நானல்ல என்றறிந்தால் சித்தமயல்
போகாத தென்னையோ புண்ணியா - தேகாதி
தன்னளவே அம்மயக்கம் சத்தியமாய் எப்பொழுதும்
உன்னளவே இல்லை உணர். (36)

(பொ-ரை) முன்னைத் தவப்பயனாயுள்ளீர்! உடம்பு முதலிய மாயேயங்கள் நானல்ல என்றுணரும் உணர்வு கை வந்த வழியன்றே ஞேயத்தழுந்துதலாகிய நிட்டை கைவரப் பெற்றுப் பேராவியற்கை யெய்துதல் கூடும்? அவற்றை யான் அங்ஙனம் உணர்ந்த வழியும் அவற்றை நானென்று மயங்கும் மயக்கம் என்னை விட்டொழியாது வந்து தாக்குதற்குக் காரணம் என்னையோ? இது வினா. அம்மயக்கம் காயமெடுக்கப் பட்ட கலத்துள் அக்காயம் வாசனைமாத்திரமாய் நிற்றல் போல அம்மாயேயங்களுள்ள துணையும் வாதனை மாத்திரமாய் உன்னை ஒரோர் கால்மெலிதாய் வந்து தாக்கி அவ்வுடம்பளவினதாய் நிற்றலன்றி முன் மெய்யாய் எப்பொழுதும் உன்னறிவினை மயக்கி வலிதாயிருந்தாற்போலில்லை என்று உணர்வாயாக. இது விடை.

ஆறாறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே
ஆறாறும் கண்டறிவன் ஆயினையே - மாறாமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். (37)

*(பொ-ரை) முப்பத்தாறு தத்துவங்களும் நின்னின் வேறென்றறிந்து அவையனைத்தும் சடமாதலையும் நீ சித்தா தலையும் அநுபவமாக உணர்ந்து, பின் உனதறிவின் கண்தோன்றும் ஆனந்தத்தை அடைந்து உயர்ந்தாயன்றே! இனி, நீ அவ்வானந்தத்தை வேறாக உணராது அதுவேயாய் நிற்பாயாக.*

மாதா பிதாச்சுற்றம் என்று மயங்கினையே
நீதான் தனுவாகி நின்றனையே - ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரணா னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனையே மெய். (38)

*(பொ-ரை) மாணவனே! முன்னெல்லாம் நீ, தாய் தந்தை சுற்றத்தார் என்னும் இவர்களையே உனக்கு உயிர் போன்றவரென்றும், இவ் வுடம்புதானே நீ யென்றும் மயங்கியிருந்து, இப்போது அவையெல்லாம் நிலையாதன என்றும் சிவத்தை அடைந்தமையால் வருகின்ற நிறைந்த பேரின்பமொன்றே என்றும் நிலைபேறாயுள்ளதென்றும் உணர்ந்தாயன்றே! அவ்வுணர்வுதானே மெய்யுணர்வாம்.*

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையில் அழுந்தி விடாதே - உனை இழந்து
காணாமற் கண்டானைக் காட்சி யறக்கலந்து
பூணாமல் எப்பொழுதும் பூண். (39)

*(பொ-ரை) இந்நிலைக்கண் வருகின்ற ஐம்புல இன்பத்தின் கண்ணும், பெண்டிர் பிள்ளைகள் என்னும் பிணிப்பினால் வருகின்ற முயற்சியின் கண்ணும் அழுந்தாது தாமரையிலையின் நீர்போல ஒட்டற்று நின்று,*

